# சீதாயணம்





## சேதுபதி

கபிலன் பதிப்பகம்

# சீதாயணம்

சேதுபதி



கபிலன் பதிப்பகம்
12, 7வது குறுக்குத் தெரு
பாரதிநகர்,
புதுச்சேரி- 605 008.

சீதாயணம்

SEETHAYANAM

(நெடுங்கவிதைகளின் தொகுப்பு)

சேதுபதி ©

SETHUPATHI

முதற்பதிப்பு டிசம்பர் 2005

பக்கங்கள்: 132

வெளியீடு:

கபிலன் பதிப்பகம்

12, 7வது குறுக்குத் தெரு

பாரதிநகர்

புதுச்சேரி- 605 008.

வடிவமைப்பு :

சொ. அருணன்

✆ 9442379558

அச்சிட்டோர் :

சூர்யா பிரிண்டர்ஸ் பைண்டர்ஸ்

18, ஆயில்மாங்கர் தெரு,

சென்னை – 14.

விலை : ரு. 60/-

காரைக்குடி கம்பன் மணிமண்டபத்தில்,

௬௭ஆம் ஆண்டுக் கம்பன் விழாவில்

திரு. ஜெயகாந்தன் அவர்களால்

வெளியிடப் பெறுகின்றது.

## பதிப்புரை

தமிழுக்கு அமரத்துவம் பெற்றுத் தந்த சிறப்பு. கம்பருக்கும், வள்ளுவருக்கும், இளங்கோவுக்கும் உண்டு என்பது பாரதியார் கருத்து. கம்பக் காப்பியத்துள் புகுந்து தத்தம் காலத்திற்கேற்பப் பாடுபொருளையும் பாத்திரங்களையும் வடிவமைத்துக் கொண்ட பாவலர்கள் தமிழில் உண்டு.

அம்மரபில் கம்பராமாயணத்துள் புகுந்து பெண் பாத்திரங்கள் பற்றி, குறிப்பாக சீதை பற்றி, கவிஞர் சேதுபதி பாடிய கவிதைகளின் தொகுப்பு சீதாயணமாக வெளி வருகிறது.

விற்பனையைக் கருத்தில் கொள்ளாமல் இப்படி ஒரு நூல் தமிழுக்கு வரவேண்டும் என்ற நோக்கில் கொணரும் எமது முயற்சி வெல்ல நீங்களே துணை!

வணக்கத்துடன்
**பதிப்பகத்தார்**






| | | |
|---|---|---|
| ✷ | உறுதிமொழி | 15 |
| ✷ | பெண்கனி | 29 |
| ✷ | நெய்தல் நாயகி | 44 |
| ✷ | தவம் செய்த தவம் | 54 |
| ✷ | சீதாயணம் | 61 |
| ✷ | அக்கினிப் பிரவேசம் | 73 |
| ✷ | அமுதும் நஞ்சும் | 109 |
| ✷ | சிதைந்த சித்திரங்கள் | 118 |
| ✷ | கவித்தீ | 126 |




# பெண்கனிக்கு ஒரு பாஅணி!

'கம்பனடிசூடி'

## பழ.பழநியப்பன்

கவிதையை "கைக்குள் அடங்காத (ஒரு) கள்ளி" என்பார் எங்கள் பேராசிரியர் ஆ. முத்துசிவனார். ஏனென்றால் கவிதைக்கு இலக்கணம் கூறுவது ஒரு கடினமான காரியம். எத்தனையோ அறிஞர்கள் எத்தனையோ விதமான இலக்கணங்களைக் கற்பித்தாலும், எல்லா இலக்கணங்களும், கவிதையினுடைய முழு வடிவத்தையும் காணச் செய்கின்றனவா என்றால் பதில் கேள்விக் குறிதான். கவிதை என்பது வற்றாத ஜீவனுடையது; ஜீவநதியாய் வளரும் இயல்புடையது. எந்த ஒரு வட்டத்திற்குள்ளும் அடக்க முடியாதது. அப்படி கைக்குள் அடங்காத ஒரு கள்ளியை, தோழர் சேதுபதி மிக லாவகமாகக் கையாள்வதை நாம் கவிதைக் கனிரசம் ததும்பி வழியும் இச் 'சீதாபாத்திரத்தில்' கண்டு உண்டு மகிழ்ந்து கூத்தாட முடிகிறது.

சீதை என்ற மகோன்னதமான பாத்திரத்தைப் பற்றிய ஒன்பான் கவிதைகளில் பல கவியரங்குகளில் பல காலங்களில் பாடியன; சில இத்தொகுப்பிற்காகவே எழுதப்பெற்றன. அவற்றை ஒரு கவிதைச் சரமாய்க் கவிஞர் சேதுபதி கோத்துத் தரும் அழகில் சொக்கவேண்டியே உள்ளது.

"என்றுமுள தென்றமிழ் இயம்பி இசை கொண்ட" கம்பன், "என்றும் உளது என்தமிழ்" என்ற உறுதியில் தொடங்கி,

"தீயையே எரித்த
தீயையே சீதையாய்
ஆக்கிய கம்பனுள்
அடர்ந்த தீ
கவித்தீ' – (பக். 130)

என்று முடிப்பது வரை, "என்னை இவள் காலம் என யாரும் கணிக்கவொணா கன்னித் தமிழு"க்கும், கவின்மிகு கவிதைச்சுவைக்கும்

'தேம்பாய உண்டு மனம் தெவிட்ட' விருந்து படைக்கின்றார் சிங்கம்புணரிச் சீமை சேதுபதி. தமிழ் வளர்த்த சேதுபதிகள் பெயர் கொண்டதாலா? மேலைச்சிவபுரியில் மேவுதமிழ்க் கல்லூரி இவருள் விதைத்த தண் – ஆர்– தமிழ் வித்தாலா?

இரக்கம் இல்லாத அரக்கர் அழிய, எல்லை இல்லாத பாவங்கள் ஒழிய எல்லோர்க்குள்ளும் உறைந்த இராமப் பண்பினை மீட்க இறுதி வரையிலும் உறுதியாய் நிற்கும் உரத்தினை உரைத்திடும் முதற்கவிதையில் ஆறு காண்டத்திற்கும் ஆலமர்வித்துப் போல ஒரோர் வரியில் வடிக்கும் சுருங்கிய விளக்கத்தில் கிட்கிந்தா காண்ட விளக்கம் நம் உள்ளம் கவர் கள்வக் கவிதை வரிகள்:

"வெளிப்படத் திரியும்
காமக் குரங்கை
மறைந்து நின்று தாக்கும்
மர்மக்கலை உணர்த்தும்
கிட்கிந்தா காண்டம்" (பக். 19)

'இன்னமும் பெண்மை இல்லச் சிறையில்' என்பதைச் சொல்லும் மிதிலைப் படலம் என்ற வரிகளும், 'நல்ல வேலைதான்' என்றபோதிலும் இலங்கைச் சிறையை நினைவூட்டும் அலுவலகம் என்ற வரிகளும் (பக்கம்–24) இவர்தம் இடித்துரைக்கும் திறமையைக் காட்டும்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖

'பெண்கனியில்' கற்பனைவளம் கொடிகட்டிப் பறப்பதைக்கண்டு கனியலாம்; களிப்படையலாம்.

"கங்குல் எழுந்த கதிரவன் மேனியை
சீதையின் காமத்தீ சினந்து தொடர்கையில்
கடலில் குதித்துத் தன்னைக்
காப்பாற்றிக் கொண்டான்' (பக்.35)



"மீனைமீன் உண்ண
மின்னலவள் கண் உண்ணத்
தானே திறக்கையில்
தலைவன் உள்புகுந்தான்" (பக். 32)

இதனால்தான்,

"கம்பன் வங்கியிலே கடன் வாங்கி நான்செய்யும்
கைத்தொழில் - இக்கவி தைத்தொழில்" (பக். 31)

என்ற இவர்தம், தொழிற்திறமை பளிச்சிடும்.

❖ ❖ ❖ ❖ ❖ ❖ ❖

'பெண்ணைக் கன்னி என்று பேசாது கம்பநாடன் பெண்கனி எனப் பேசும் பெருமையினைச் சிந்தித்தால் என்ன விடை கிடைக்கும்?' என்ற வினாவினைக் கேட்டு, இவர்தரும் விடை நல்ல சிந்தனைக் கனியாகும்:

"பெண் வயிற்றில் பிறந்த பெண்ணாக இல்லாது
மண் வயிற்றில் அவதரித்த மங்கை இவள் என்பதாலா?" (பக். 42)

பிறத்தலையும், அவதரித்தலையும் வித்தியாசப்படுத்தி விண்டுரைக்கும் கவித்துவம் கனியப் பெற்றவர் கவிஞர் சேதுபதி.

❖ ❖ ❖ ❖ ❖ ❖

இலங்கையைப் பற்றி எண்ணற்ற கவிஞர் இதுவரைக்கும் எண்ணிலா வகையில் இனிய கவித்துளிகள் படைத்துள்ளனர் என்றாலும் இளைய தலைமுறை இளவல் சேதுபதியின் எழுதுகோல் தூளியில் பிறந்த துளிகள் துளிர்விடும் இவர்தனக்கே உரிய புதிய சொத்தாகும்.

"இந்திய மண்ணின் இதயத்தில் இருந்து
கசிந்து விழுந்த கருணைத்துளி - அது
பின்னர்,
காகுத்தன் மனைவி கற்பு நெருப்பினுக்கு
ஆகுதியான அவசரத்தில் அது ஒரு தீத்துளி" (பக். 47 – 48)



நம் மனக்கண்ணில் விரியும் இலங்கையின் வரைபடம் அகக்கண்களையல்லவா திறக்கிறது!

முண்டாகக் கவியின் முழுநேர ரசிகர் இவர் எனக் காட்டும் இவர்தம் புரட்சிக் கனல் புழுதி தெறிக்கும் புதுயுகக் கவிக்கடலின் கரையோரத் துளி அலைகள், இதோ:

"எங்கெலாம் அநீதி ஆட்சி புரியுமோ,
அங்கெலாம் வந்து அசுரப் பசியுடன்
விழுங்கிப் பூமியைப் புதிதாய்ச் சமைப்பேன்
பிரளயம் என்று உலகம் பேசும் - அது
நிகழும் முன்னர் நீங்கள் திருந்துங்கள்
நிலைபெற்று வாழுங்கள்!" (பக் 53)

ஃ ஃ ஃ ஃ ஃ ஃ ஃ

சீதாயணக்கவிதை (பக். 61) இவர்தம் ஒன்பான் சுவைநிறை அடிசில் கவிதைகளுக்கு அடையாளம் காட்டிடும்; ஒருபானைக்கு ஒருசோறு பதம் படைத்திடும்.

மாதிரிக்கு, சுவையான சில சுவைகள்:

"இராவணப் பூனை
சீதையைக்
கூண்டோடு பெயர்த்துக்
கொண்டு போனது"
(அது சைவப் பூனை)
"கிளியை வளர்த்தவள்
கிளியாகிப் போனாள்" (பக். 64 – 65)
"பிரிக்கத் துணிந்த மாமியின் பெயர்தனக்கு
விதிக்கப்பட்டதால் மறக்கப் பட்டேனோ?
சீதையால் துறக்கப்பட்டேனோ?
நினைந்து உருகும் கிளிக்காதில்

சுமந்திரச் சொற்களாய்ச்
சீதை நிரம்புவாள்...." (பக். 68 – 69)

இன்றையப் புதுக்கவிதை வித்தகர்களுக்கே உரியதான சமுதாயச் சிந்தனை நிரம்ப உண்டு சேதுபதியிடமும் என்றாலும், இவர்தம் கவிதை வளத்தோடும் சரிநிகர் சமானமாயிராது சற்றே தூக்கலாய் இருக்கும் கருத்துச்செறிவு.

"தந்தையர் வளர்ப்பினில் உள்ளவர் எல்லாம்
சீதையர் - கூடவே வில்லாய்க் கிடக்கும்
வரதட்சணை" (பக். 122)

இப்படி அடுக்கிக் கொண்டே போகலாம். இந்நூலின் கருத்தாழத்தையும் கவிதையின் நீளத்தையும்; அப்புறம் பெண்கனிக்குப் பா அணி செய்யும் இந்த அணிந்துரையே அடிமுதல் நுனிவரை நூலை அலசியதோடு, அடியொற்றி நகல் எடுத்ததும் ஆகிவிடும். இனி இடையில் நான் எதற்கு? நீங்களே சீதை அயணப்படி கண்நடை ஆரம்பியுங்கள்! களிநடை போடுங்கள்!

ஒன்றை மட்டும் உங்கள் அயணநடையில் அயணாய் ஒளியூட்டிச் சொல்வேன்; சேதுபதியின் இலக்கியஅயணத்தில் இந்நூலும் ஒரு மைல்கல்லே; இவர் செல்லவேண்டிய கவிதைப்பயணங்கள் இன்னும் எத்தனையோ உள; எட்ட வேண்டிய சிகரங்கள் அத்தனையும் எளிதாய்க் கிட்டிடும் இவர்க்கு எனக் கட்டியம் கூறிடும் மேன்மைமிகு மெய்க்கீர்த்தி இந்நூல்.

தமிழ்கூறும் நல்லுலகத்தார் இதுபோன்ற நல்ல தரமான கவிதைப் பெட்டகங்களைத் தம் கைவசப்படுத்திடுக! தம் கையிருப்பைக் கூட்டிக் கொண்டிடுக!

"சரணம்" அன்பன்,
வி 110/1, அண்ணாநகர், கம்பனடிசூடி.
சென்னை – 600 040.



## வணக்கமும் நன்றியும்!

பாற்கடல் நோக்கிப் புறப்பட்ட பூனையைப் பின்தொடரும் சிற்றெறும்புகளுக்கு மத்தியில் அற்ப நுண்ணுயிரியாய்க் கம்பர் பின்னிற்கும் எனக்குச் சொல்ல என்ன இருக்கின்றது, நன்றியையும் வணக்கத்தையும் தவிர?

எனக்கு எப்போதும், எல்லாமும் பாரதியார் தான். நமக்குக் கவிதை என்றால் எப்படிப் பாரதியாரோ, அதுபோல் பாரதியாருக்குக் கம்பர். தமிழைப்பற்றிப் பேசுகிறபோதும், இலக்கியம் குறித்து எழுதுகிறபோதும் பாரதியாருக்குமுன்வந்து பேருருக் கொண்டு நிற்பவர் கம்பர். கம்பராமாயணத்திற்கு அவர் தந்த கவி விளக்கம்–

"எல்லை ஒன்றின்மை எனும் பொருள் அதனைக்
கம்பன் தன் குறிகளால் காட்டிட முயலும் முயற்சி..!"

யோசித்துப் பார்த்தால் கவிதையின் முயற்சியும் அதுவாகத்தான் இருக்கும்!

ஃ ஃ ஃ ஃ

சிற்றரசர்களும், பேரரசர்களும், சக்கரவர்த்திகளும் ஆண்டு அமர்க்களப்படுத்திக் கொண்டிருந்த தமிழகத்தில், மன்னராட்சிக் காலத்தில் மக்களாட்சிக்குரிய அனைத்துக் கூறுகளையும் உள்ளடக்கிப் பொதுவுடைமைச் சமுதாயத்தையும், போரில்லா உலகத்தையும் தமது கவித்திறனாலே படைத்துக் காட்டி மானுடப் பெருங்கவியாகக் கம்பர் விசுவரூபம் கொண்டு நின்ற பெற்றியைத் தரிசித்த உத்வேகத்தினால்தான் பாரதியார் அவரைக் 'கம்பன் என்றொரு மானிடன்' என்று போற்றி மகிழ்ந்தார்.

அந்தப் பெருங்கவியிட்ட பிச்சை எமது கவிப்பாத்திரத்தில் வீழ்ந்தபோது இது அமுதசுரபியாயிற்று. அறுசுவையோடு அளிக்க முடியாவிட்டாலும் ஆர்வமுடையார்க்கு அரைவயிறு நனையவேனும் அளிக்க முடியும் என்கின்ற நம்பிக்கையில் கம்பரைப் பருகிப் பரிமாற ஆரம்பித்தேன். கம்பர் வீடுகளான கழகங்கள் இந்தக் கட்டுத்தறியையும் அரங்கேற்றி அருளின.



தாய்மையன்போடு ஆரத்தழுவித் தோழமை பேணுதலில் இராமனாய்ப் பொலியும் கம்பனடிசூடியார் இல்லையெனில் இந்தத் தொகுப்போடு உங்கள் முன்னிற்க எப்படி முடியும்?

கல்லூரிப் பருவத்தே எனைக் கண்டு ஆட்கொண்டு கம்பரை எமக்குச் சொந்தமாய் ஆக்கி, காரைக்குடி, சென்னை, நாட்டரசன்கோட்டைக் கழகங்கள் தோறும் ஏறி முழங்கக் களம் அமைத்துத் தந்ததோடு, இத்தொகுப்பிற்கு இனிய அணிந்துரையும் நல்கிய அவ்விதயத்திற்கு நன்றி சொல்லி, முடியுமோ?

அப்படியான நிலையில், கம்பனடிப்பொடியார், தவத்திரு குன்றக்குடி அடிகளார், தமிழறிஞர் அ.ச.ஞா., நீதியரசர் மு. மு. இஸ்மாயில், கல்விக்கடல் இராமராசன் முதலான சான்றோர்களின் பாதங்களுக்கெல்லாம் என்நன்றி மலர்கள் சென்று சேர வேண்டும்.

என்னையும் ஒரு பொருட்டாய் ஏற்று ஆதரித்த அவ்வறிஞர்களின் செவிலிமையில் வளர்ந்த இச்சேயின் குறு முயற்சியான இத்தொகுப்பில் அரங்கேறிப் பாடிய அனைத்துக் கவிதைகளும் இல்லைதான். ஆயினும் அன்றாடம், உணவு பருகுதல்போல் படித்துப் பழகிவரும் பாரதியார் பாடலும், கம்பவாசகமும் என் சிந்தையில் ஊறி நின்று செய்த லீலைகள், சில கவிதைகளாய் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளன.

ஃ ஃ ஃ ஃ ஃ ஃ

நடையில் நின்றுயர் நாயகனைப் பாட வேண்டிய தேவை கம்பருக்கு அன்றிருந்தது. பாஞ்சாலி சபதம் பாட வேண்டிய தேவை பாரத விடுதலைக்குத் தம்கவி யாத்த பாரதியார்க்கு நேர்ந்தது. புற விடுதலை பெற்று இன்னும் அகவிடுதலை பெறமுடியாமல், மானுடம் பல்வேறு அரக்கத் தனங்களுக்குள் சிக்கிச் சிறைப்பட்டுக் கொண்டிருக்கின்ற இந்த வேளையில், ஆண் விடுதலையும் பெண்விடுதலையை அடியொற்றி நிற்கும் இக்காலத்தில், இராவணன் உள்ளிட்ட யாவருக்குமான விடுதலையைப் பெண்மையே அளித்தாக வேண்டும் என்கின்ற சிந்தனையில் சீதாயணம் பாடச் சேதுபதிக்கு வாய்த்திருக்கின்றது. கவியாற்றலில் மிகுந்த தீரமிக்கவர்களின் கைகளில் கிடைத்திருக்க வேண்டிய இக்கவிப்பொருள் எளியேன் கைப்பட்டு



என்னவெல்லாம் ஆகியிருக்கின்றது என்பதனைத் தான் இனிக் காணப் போகின்றீர்கள்..!

கொஞ்சமேனும் நயமுடையதான வரிகள் இவற்றுள் கிட்டுமெனில், அது பாரதியார் அருளாலும் அவர்வழிவாழும் அன்பர்களாலும் வாய்த்தவை.

பாரதியாரைத் தொடர்ந்து கம்பரும் பிரத்யட்சமாகி அருளும் எழுத்தாளர் ஜெயகாந்தன் அவர்கள் தலைமையில் குழுமும் சபையிலும், தோழர் சந்திரகாந்தன் உள்ளிட்ட தொடரும் நண்பர்களின் கூட்டத்திலும், முனைவர் பழ.முத்தப்பனார் முதல்வராய்ப் பணியாற்றிய மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரியில் பயிலுங்காலத்து ஊர்கள் தோறும் சென்று பேசவும் கேட்கவும் நேர்ந்த அரங்குகளிலும் பெற்றவற்றில் கம்பசாரத்தின் கொஞ்சத்தைத் தந்திருக்கின்றேன்.

அந்த வகையில் காரைக்குடி, நாட்டரசன்கோட்டை, சென்னை, கோவை, பட்டுக்கோட்டை, புதுக்கோட்டை, பொன்னமராவதி, வேலூர், அறந்தாங்கி மற்றும் தேரழுந்தூர் உள்ளிட்ட நகரங்களில் கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழ் வளர்க்கும் கழகத்தாரும், அக்களங்கள் தோறும் உடனிருந்து தம்பேரன்பால் என்னைக் கவர்ந்து எளிய அன்பில் இலக்கியம் புகட்டும் தூய அண்ணல் மா.நா. சந்திரசேகரனாரும் என் நெஞ்சில் நிறைந்தவர்கள்.

சிறப்புகள் உண்டெனில் அவர்களது; சிறுமைகள் யாவும் என்னது. பொறுத்து ஏற்றுக் கொள்ளும் தங்களுக்கும், இந்நூலை வடிவமைத்து வழங்கிய இளவல் சொ.அருணனுக்கும், பொருத்தமான படங்கள் தந்தருளிய நல்லுள்ளங்களுக்கும், பதிப்பித்து வெளியிடும் கபிலன் பதிப்பகத்தார்க்கும், இந்நூல் வெளிவரக் காரணமாகிய தோழர் நவபாரதி உள்ளிட்ட அனைத்து அன்பர்களுக்கும், சிறப்புற வெளியிட இருக்கும் காரைக்குடிக் கம்பன் கழகத்தாருக்கும் என் நன்றி மலர்கள் காணிக்கை.

கொடுக்கவும் பெற்றுக் கொள்ளவும் அன்பினை விடச் சிறந்த பொருள் வேறு உண்டோ?

கைகூப்பலுடன்

புதுச்சேரி. **சேதுபதி**



"எங்கள் ஜானகியின் கரம் பற்றியதாலல்லவா நீ மகாராஜனாக விளங்குகிறாய். மன்னர் மன்னா! தாமரைக் கண்ணா! கேள். இராவணனைக் கொன்றவன் என்ற கீர்த்தியோடு நீ விளங்குவது எங்கள் ஜானகியைக் கைப்பிடித்ததாலல்லவா?

உன்னோடு கானகம் சென்று, உன் கட்டளையை மீறாமல் தனது மாய உருவத்தை மட்டும் வைத்து, உண்மையான உருவத்தை நெருப்பில் பிரவேசிக்கச் செய்து, அரக்கனோடு (இராவணனோடு) இலங்கையை அடைந்து அசோகவனத்தில் வாழ்ந்து, அவனுடைய பேச்சைக் கேட்டுக் கோபமடைந்து அவனைத்தன் கண்களால் சுட்டெரிக்காமல் புகழ் எல்லாம் உன்னையே வந்து அடையுமாறு செய்ய வில்லையா?

திருமகளின் நாயகனே! தியாகராஜனைப் பரிபாலிப்பவனே! எங்கள் ஜானகியின் கரம் பற்றிய தாலல்லவா, நீ மகாராஜனாக விளங்குகிறாய்!"

-தியாகராஜ கீர்த்தனையிலிருந்து*-

*(தமிழில் - கலைமாமணி மா.வரதராஜன் ; நன்றி- வானதி பதிப்பகம்)





"எல்லை ஒன்றின்மை எனும்பொருள் அதனைக்
கம்பன் குறிகளால் காட்டிட முயலும்
முயற்சியைக் கருதியும் முன்புநான் தமிழச்
சாதியை அமரத்தன்மை வாய்ந்ததுஎன்று
உறுதி கொண்டிருந்தேன்!"

*- மகாகவி பாரதியார்*



## உறுதிமொழி

அன்னை தமிழே
உன்னைப்
பொய் சொல்லிப்
புகழத்
தெரியாது; முடியாது.
மெய்யாய் ஓர் ஐயம்–

இன்னுமோர் ஐம்பதாண்டில்
இல்லாமல் போவாய் என்று
ஐ.நா. சபைக் குறிப்பு
ஆரூடம் கணிக்கிறது!

ஆண்டுக் கணக்கில்
குளறுபடி– ஆதலினால்
செம்மொழிச் சிறப்பு இன்னும்
சேரலில்லை உனை வந்து!



இன்னும் இந்த நாட்டில்
இப்பொழுதும்
உன்னால்தான்
அரசியல் நடக்கிறது;
ஆதாயம் கிடைக்கிறது.

மெல்லத் தமிழர்
உன்னைக் கொல்ல
ஆயிரம் நச்சூசி
உனை நோக்கிப் பாய்ச்சுவர்.

'என்ன செய்யப் போகின்றாய்
இளந்தமிழே?' எனக் கேட்டால்
கம்பன் திசை நோக்கிக்
கைகாட்டிச் சிரிக்கின்றாய்!

'எம்மொழி செம்மொழி?'
எனக்கேட்பார் தமைப்பார்த்து
'எம்மொழி செம்மொழி!'
எனப்புகன்றான் கம்பகவி.

இந்திய தேசத்து
எல்லைகள் கடந்து
உலகம் முழுவதையும்
பாடிய மனித கவி-



கும்ப முனி பற்றிக்
கூறுகிறான் இப்படி-
"என்றுமுள தென்றமிழ்
இயம்பி இசை-கொண்டான்"

'தமிழ்-
அன்றிருந்ததா?' என்னில்
'ஆம்!' என்று உரைப்பான்; பின்
'இன்றிருக்குதா?' என்னில்
'ஏன் ஐயம்?' எனக்கேட்பான்;
'பின்வரு நூற்றாண்டுகளில்..?'
'நிச்சயமாய் இருக்கு'மென
என்றுமுள தென்றமிழை
இயம்பி இசைகொண்டான் காண்!

அண்மையில் ஞானபீட
விருதுக்குப் பெருமைசேர்த்த
ஜெயகாந்தன் எனும் செம்மல்
செப்புகின்ற விளக்கம் இது.

"என்றுமுள தென்றமிழ்!'
இன்னொரு பொருள் இதற்கு-

'என்றும் உளது என் தமிழ்'
எனில்,



எப்படி இறக்கும் ?'– இது
என்றென்றும் இருக்கும் எனக்
கம்பன் கொடுத்த
உறுதி மொழி இதுவன்றோ..?
இணையத்தில், கணிப்பொறியில்
ஏறிவந்த மொழிகளெலாம்
பனையோலை ஏறி வந்த– கம்பன்
பாட்டிற்கு ஈடாமோ?

வானம் அளந்தது
அனைத்தும் அளந்ததனைக்
காலனும் நெருங்குவனோ–
கல்லைக்
கறையான் அரித்திடுமோ?

மூல எழில் சிதையா
முத்தமிழே உன் இளமை
நாளும் பொலிந்திலங்கும்;
நான் உறுதி தந்திட்டேன்
வாழ்க வணக்கம்!





விளையாட்டாய்ச் செய்தாலும்
வினைக்கேற்ற தண்டனையை
அவதாரமானாலும்
அனுபவிக்க வேண்டுமெனக்
காண்டங்கள் தோறும்
கட்டளைபோல் அறம் உரைக்கும்
உறுதிகள் அநேகம்-
கம்பனின் காப்பியத்தில்!

பால காண்டத்தில்
பண்ணிய தவறுகளை
மீள நினைந்து திருந்த உதவும்
அயோத்தியா காண்டம்!

வேறுள குழுவையெல்லாம்
மானுடம் வெல்ல வேண்டிக்
கானகம் சென்று பயில
ஆணையிடும் ஆரண்ய காண்டம்!

வெளிப்படத் திரியும்
காமக் குரங்கை
மறைந்து நின்று தாக்கும்
மர்மக்கலை உணர்த்தும்
கிட்கிந்தா காண்டம்!



தனிமை நெருப்பேறித்
தவம்புரியும் தம்பதிக்கு-
அனுமன் வழியாக
உறுதியளிக்கும்
நல்ல
மந்திர காண்டம்
சுந்தர காண்டம்!

நாளும் யுத்தமாய்
நீளும் வாழ்க்கையில்
யாரொடும் பகை கொள்ளாமே
வென்றிபெறும் யுக்தியைப்
புகட்டும் ஓர் யுத்த காண்டம்!

எங்கெலாம் மானுடம்
சஞ்சலம் எய்துமோ
அங்கெலாம் கம்பகவி
உறுதி உரைக்க வரும்!

அஃதாவது,
தவணை முறையில்
கணவனை விற்று
மாயமான் வாங்க
அலைகிற பெண்களை
இலக்குவக் குரலாய் எச்சரிக்கும்!

இது-
காமச்சேட்டைகள்
புரிவோர்க்குக் கவசம்
காவி ஆவதைத்
தோலுரித்துக் காட்டும்!

காவி கட்டிக்
காட்டுக்கே போனாலும்
மனைவியோடுதான்
மடம் வைக்க வேண்டுமென
நெறிமுறை உரைக்கும்!

ஏமாந்தபிறகு
ஏங்கியழும் இளையர்துயர்
தாமாகப் போக்கக்
களமிறங்கும் சடாயுவைப்போல்!

குழப்பம் மிகுந்த
கணங்களில் எல்லாம்
திரிசடைபோல்
ஆறுதல் மொழியும்!

குற்றம் காணில்,
கும்பனைப்போலச்
சுட்டிக் காட்டி



இறுதி வரைக்கும்
கூடவே நிற்கும்!

அதுவே,
அறிவை விடணன் ஆக்கும்!
அதைத் திரிக்கும்
உணர்ச்சியைக் கும்பனைப்போல்
உருவின்றிச் சிதைக்கும்!

ஆணவன் இராவணன்
ஆயினும் கலைஞன்!- அவன்
பத்துத் தலைசுமந்த
பாவத்தை- காமத்தை
மிச்சம் இல்லாமல் துடைத்து
மரணம் எனும்
பிச்சையளித்துப் பொலிந்திடச் செய்யும்!

மண்டோதரிக் கற்பின்
மகிமையைச் செப்பும்!
சூர்ப்பணகைக் காமத்தை
முலையொடு போக்கும்!

பிறர் அந்தரங்கத்தில்
நுழைத்தால் அறுபடும்
மூக்கு என்பதை-

இலக்குவனைக் கொண்டு
செய்தும் காட்டும்!

சூர்ப்பணகையின்–
முலையறுத்துக் காமத்தைப்
பாதி சிதைத்த கம்பன்
மூக்கறுத்து–'முக்கால்'
போக்கிவிட்ட பின்னாலே
நாக்கை அறுக்க மறந்ததனால்
நடந்த கதை–
நாக்'கால்' காமம்
நடத்தி முடித்த கதை–

வாக்குறுதியாய்க் கம்பன்
வழங்கிய மொழி இதுதான்
"கற்றவர் ஞானமின்றேல்
காமத்தைக் கடக்கல் ஆமோ?"

பற்றற்ற தொண்டு
பணிவு, பேரன்பு
மெத்த இருக்கும் ஆன்ம எழுச்சியினை
அனும விஸ்வரூபமாய்
ஆக்கும்!– அதுவே
தேனும் மீனும்
தந்த குகனுக்குத்

தன்னையே அளிக்கும்
இராம அன்பில்
மானுடம் துளிர்க்கும்
சீலம் உரைக்கும்!

ஆவிபோம் வேளையில்
அறிவினைத் தந்து
காம வாலியைத் தம்
கையகப் படுத்தும்!

'உண்டா இல்லையா?'
எனும் தர்க்க வாதத்தில்
சீதையின் இடையாய்க்
கடவுளை உணர்த்தும்!

'அளவிற்கு மீறித் துன்பம்
உயிரினை வாட்டும்;
அனைத்தையும் போக்கி
அன்பே காக்கும்'
என்கிற உறுதியைக்
காப்பியம் முழுக்க
எடுத்துச் சொல்லும்
கம்பனின் கவிதை!



'இன்னமும் பெண்மை
இல்லச் சிறையில்'
என்பதைச் சொல்லும்
மிதிலைப் படலம்!

'நல்ல வேலைதான்!'
என்றபோதிலும்
இலங்கைச் சிறையை
நினைவூட்டும் அலுவலகம்!

அக்கினிக் குளியலை
அன்றாடம் நடத்தும்
இல்லங்கள் இன்னும்..!

தேச வரைபடத்தையே
நாற்காலியாய்ப் பார்த்து
நாசம் புரிகின்ற
நஞ்சர் நெஞ்சங்களில்
நந்தியம்பதி நெருப்பினை
வைக்கும்!

இன்னும்
இராமாயணம்
முடியவே இல்லை-



சீதை சிறையிருக்கிறாள்
சில இடங்களில்
மிதிலாபுரிகளில்..!
பல இடங்களில்
இலங்காபுரிகளில்..!

தற்கொலைக்கு வழிதேடி
அலையும் இராமனைத்
தெருட்ட வழியின்றித்
திகைக்கிறான் இலக்குவன்!

தூது சொல்ல
அலைகிறது இன்னும்
அனுமக் குரங்கு

வதந்திகள் பரப்பும்
வாய்கள் ஊடகங்கள்!

அவரவர் துன்பம்
தொலைக்க வழியின்றித்
திரியும் மனிதர்க்கு
முகவரி சொல்ல ஏது நேரம்..?

நொடிக்கொருமுறை
மெல்லக் கொல்லும்

விஷ ஊசியை நம்முள்
இறக்கிக் கொண்டிருக்கிறது காலம்!

மரத்துப் போய்விட்டது
மனசாட்சி -
கண் எதிரில்
அனைத்தும் நடக்கிறது

அதனால் என்ன
எனக்கெனப் போவோரை
இழுத்துக் கம்பன்
கவிதை சொல்லும் உறுதி
இதுதான்-

"இரக்கம் இல்லாத
அரக்கர் அழிய
எல்லை இல்லாத
பாவங்கள் ஒழிய
எல்லோர்க்குள்ளும் உறைந்த
இராமப் பண்பினை மீட்க-

துறக்கக் கூடாது தான் ஆயினும்-
கணவனைக் காவு கொடுத்து
பழியினைப் பரிசாய் ஏற்று



இறுதி வரையிலும்
நல்லருள் துறந்த
நாயகி கைகேயி-
உறுதி ஒன்று தான்
உடனடியாய் நமக்கு வேண்டும்..!

- காரைக்குடி கம்பன் மணி மண்டபத்தில் 25.03.2005 வியாழன் அன்று நடைபெற்ற 67ஆம் ஆண்டுக் கம்பன் விழாக் கவியரங்கில், கவிஞர் அப்துல்காதர் தலைமையில் அரங்கேறிய கவிதை.







"சொல்லும் தன்மைத்துஅன்று அது
குன்றும்சுவரும்திண்
கல்லும்புல்லும் கண்டுஉருக,
பெண்கனி நின்றாள்''
(பாலகாண்டம் : 32)



## பெண்கனி

எழுத்து - கம்பனின்
பொருள் சுமக்கும் பல்லக்காய்
எப்போதும் காத்திருக்கும்!

எதுகையும் மோனையும்
எப்போது அழைப்பு வரும்
என்று கைகட்டி நிற்கும்!

மலட்டுச் சொல் கம்ப
மகரந்தத் தூளுக்காய்
மலரென விரிந்து நிற்கும்!

மறுபிறவி இனியின்றி
எப்போதும் சித்திரமாய்
மணமலர் ஆகிநிற்கும்!



கிழட்டுக் கருத்தெலாம்
கிழித்துப் புத்துயிராக்கி
கிழக்கவன் கவியதாக்கும்!

கீழ்வானச் சுடரில் அவன்
கிளைகண்டு உலகம் தன்
பயவிருள் போக்கடிக்கும்!

பூனையின் வடிவாகிப்
பாற்கடலைக் குடித்த சுவை
புதுக்கவியில் நிரப்பி வைத்தான்!

புத்தமுதச் சொற்களினால்
நரைதிரை மூப்பின்றி
பொலிகின்றாள் தமிழணங்காள்!

ஃ ஃ ஃ

கம்பன் வங்கியிலே
கடன் வாங்கி நான் செய்யும்
கைத்தொழில்– இக்கவி
தைத் தொழில்!

பொய்யில்லை; அத்தனையும்
கம்பன் கொடுத்தது
கொஞ்சம் புனைசரக்கு!



கூடிய மட்டிலும்
கலப்படம் இல்லாத
அன்புச் சரக்கு!

1

நூறு கோடி மின்னல்கள் கூடி
சேவிக்க வந்த மேனிலை மாடத்தில்
கன்னியர்கள் புடைசூழக்
கலைமாது நின்றிருந்தாள்!

முற்றுந் துறந்த
முனிவனின்பின் போன வள்ளல்
சற்றே நிமிர்ந்ததால்
"ஷாக்" அடித்து நிறுத்தியது.

பார்வை கிளியாகி
பறந்து வந்து கொத்துகையில்
கன்னி கனியாகி
கண் இமைக்க மறந்திருந்தாள்!

மீனை, மீன் உண்ண
மின்னலவள் கண் உண்ணத்
தானே திறக்கையில்
தலைவன் உள் புகுந்தான்!



பாதை மாறியது
பார்வை வழி ஏறியது
இருவரும் மாறிபுக்கு
இதயத்துள் குடிபுகுந்தார்!

பாற்கடல் ஞாபகம்
பற்றிக் கொண்டது!

2

விழித்துப் பார்க்கையில்
வில்லாளன் போய் மறைந்தான்.

இமையவர் கடைய
யாவையும் வழங்கிய
பாற்கடல் வெற்றுப்
பாழ்க்கடலானது போல்
பாவை தவித்திருந்தாள்!

மலர்ப்படுக்கை சேர்ந்த
மங்கையரின் கேலி எல்லாம்
விழலுக்கு இறைத்த
நீராகிப் போயிற்று.

விழிதுயில் மறந்ததனால்
மனச் சபைதான் கூடிற்று.



வந்தவன் யார் என்ற
வழக்கு எழுந்தது.

3

நடப்பது மாதிரி நடந்து
என்னுள்
கிடப்பன யாவையும்
திருடிப் போனவன் காமனோ?'

'கைவில் கரும்பில்லை
கவனித்துப் பார்த்தேன் நான்'
பொய்யின்றிச் சாட்சியம்
கண் கூறி முடித்தது.

தேவர் குலத்துதித்த
திருமகனோ?

படபடத்து இமை என்னும்
இதழசைத்து விழி கூறும்
''இமைக்கும் கண்களை
இமைக்காமல் நான் பார்த்தேன்''

யார்
யாரவன்?



பாரத நாட்டு நீதிமன்றம் போல
பதில் சொல்லாமல் வழக்கு
ஒத்தி போடப்பட்டது.

4

அதுவரை காதல்
சிறையில் சீதையாள்
தண்டனை பெற்றுத்
தனித்துக் கிடந்தாள்!

திருட்டுக் கொடுத்தவளே
தண்டிக்கப்பட்டாள்!

கங்குல் எழுந்த
கதிரவன் மேனியை
சீதையின் காமத்தீ
சினந்து தொடர்கையில்
கடலில் குதித்துத் தன்னைக்
காப்பாற்றிக் கொண்டான்.

அவள்-
அவனான வெம்மையில்
மலர் கருகிற்று!



மாலை தீய்ந்து
இரவாய்க் கறுத்தது!

இருட்கனி
இராமனையும்
இன்னல் படுத்தியது!

5

பொழுது விடிந்தாலும்
புத்தி நிலைபெறவில்லை;
பகல் வரும் வேளையிலும்
பரிதவிப்பு ஓயவில்லை!

அப்போது,
ஆச்சரியக் கூச்சலுடன்
*நீலமாலை ஓடிவந்த
கோலம்-
குலமகளைக்
குலுக்கி நிமிர்த்திற்று.

"தசரதன் மைந்தன்
தனிப்புகழ் இராமன்
முனிவரும் இளையனும்
உடன் வர வந்தவன்

*சீதையின் தோழி

கண்ட வில்லைக்
கையில் எடுத்தான்
கண்டோம் கேட்டோம்
இற்று வில் வீழ்ந்தது''

6

படபடப்போடு மனம்
பட்டி மண்டபம் நடத்திற்று.

“அவனா?''

“அவன்தான்!''

அவனே தானா?''

“அவன்தான்! அவன்தான்!''

அவளே நடுவராய்
ஆகி முடிவெடுத்தாள்–

“அவன் அல்லனேல் யான்
இருக்க மாட்டேன்
இறப்பேன்''



மணமுடிக்கப் பெரியவர்கள்
அயோத்திக்குத் தூது
அனுப்பி இருக்கிறார்கள்.

தயரதன் வரும் வரைக்கும் - ஓர்
தர்க்கம் நடத்தலாமா?

7

அறுபதினாயிரம் பேர்
அங்கங்கே வைத்து வைத்து
முழுத்திறனும் வெளியாக
முன் கொணர்ந்து வைத்த வில்லை
ஒருவனாய் இராமன்
ஒடித்தது எப்படி?

கன்னி அவனையே
கணவனாய் வரித்தபின்
இன்னும் நான் எதற்கென்று
இற்று வில் வீழ்ந்தது.

இதற்கு,
முன் தொட்டோர் எல்லாம்
முழுமூச்சாய் வில்லென்று
எண்ணித்தான் தொட்டார்கள்
இற்றுப் போய் வீழ்ந்தார்கள்.



ஆனால் இராமனோ
கன்னி சீதை - திருக்
கழுத்துக்கு மாலை என
எண்ணி வைத்தான்....

இடையில் தடையாய் நான்
எதற்கென்றே இற்றது அது.
இன்னும் சொல்லலாம் -
எடுத்தவன் இராமன்தான்
இயக்கியவள் சீதையன்றோ?

அன்புறை பெண்ணுக்கும்
அஃறிணை வில்லுக்கும்
என்ன தொடர்பு என்று
இனி-
வில்லே இல்லாமல்
வளைப்பதாய் எடுத்து
ஒடித்துப் போட்டானோ?

எல்லா அணிகளையும்
எவராலும் தர முடியும்
மங்கல அணியை
மணவாளனன்றி இனி
இங்கு எவர் தருவார்?



''ஒல்லையில் வா'' வென்று
மதில்கொடி பறந்ததாய்க்
கம்பன் எழுதியதைத்
தற்குறிப்பேற்றம் என்று
தவறாகக் கூறாதீர்,
சீதையின் உட்குறிப்பைச்
சனகன்
உணராதிருக்கையில்..!

கடவுளே ஆயினும்
காதல்பிரிவு
சுடும் எனச் சொல்லிய
கவிதை நாடகம்
நிறைவை நெருங்குகிற
நேரம்...

8

வந்தனர் அனைவரும்
'கொணர்கவே சீதை' என்ன-
அந்தப்புரத்தார்
சீதையிடம் நெருங்கினார்கள்.

முடிவில் மாறாது
திடமோடு இருந்த செல்வி

என்னும் அழகுக்கு
இன்னலாம் அழகு செய்தார்.

'அவன்தான்' என்றொரு
காதில் குழையாட,
'அவன் இல்லை' என்றாட
மறுகாதில் குழையிட்டார்.

தள்ளாடும் நெஞ்சம்
தடுமாறும் அவள் நடையில்
'உண்டென்றும் இல்லை'என்றும்
ஓயாது சண்டையிடும்
ஆத்திகமும் நாத்திகமும்
அலுக்காது பேசுகிற
பரம்பொருளின் உருவகமாய்ப்
பாவை அவள் இடைமாறும்.

எல்லாம் அணிந்து அவள்
எழுந்த சுமை தாங்காமல்
பாதம் சிவந்தது
பதறினாள் பூமியன்னை!

'மலரிலே இருந்த மங்கை
மலர்ப்பதம் நோகலாமா?'
தயங்கியவள் பாதம்



தரையில் படும்போதெல்லாம்
மர்ம மலர் பரப்பி
மண்அன்னை பூத்திருந்தாள்!

9

பெண்ணைக் கன்னி என்று
பேசாது கம்பநாடன்
பெண்கனி எனப்பேசும்
பெருமையினைச் சிந்தித்தால்
என்ன விடை கிடைக்கும்?

பெண்வயிற்றில் பிறந்த
பெண்ணாக இல்லாது
மண் வயிற்றில் அவதரித்த
மங்கை இவள் என்பதாலா?

தனக்குச் சோறிட்ட
சடையப்பன் ஒரு கண்ணாய்-
தரணிக்குச் சோறிட்ட
உழவர்களை மறுகண்ணாய்
கருதிக் கம்பன் காப்பியம் பாடியதும்

கருணை மனத்தோடு
'ஏரெழுபது' இசைத்ததுவும்

வரலாறு சொல்லுவதை
வகைப்படுத்திப் பார்க்குங்கால்,

உழுத சனகனின்
பொன்கலப்பை மண் அழுந்த
உதித்த தேவி என
உணர்த்துவதன் குறியீடா?

கொம்பில் பழுத்த கனி
கோதொன்றும் இல்லாமல்
அன்பில் வழுத்தும் அழகு கனி;

கம்பன் கவியில் வரும்
கண்மணியுள் இக்கனி நம்
இராமச்சந்திரனின்
'இதயக்கனி' என்பதாலா?

*- காரைக்குடி கம்பன் மணி மண்டபத்தில் 23.03.1997 அன்று நடைபெற்ற 59 ஆம் ஆண்டுக் கம்பன் விழாக் கவியரங்கில், கவிஞர் மு. மேத்தா தலைமையில் அரங்கேறிய கவிதை.*







"இந்து அன்ன நுதல்பேதை இருந்தாள் நீங்காஇடர்கொடியேன்
தந்தபாவை தவப்பாவை தனிமைதகவோ எனத்தளர்ந்து
சிந்துகின்ற நறுந்தரளக் கண்ணீர் ததும்பி, திரைத்து எழுந்து
வந்துவள்ளல் மலர்த்தாளின் வீழ்வது ஏய்க்கும் மறிகடலே!"

(யுத்தகாண்டம் : 6067)



# நெய்தல் நாயகி

நக்கிக் குடித்த பாற்கடல் முழுவதையும்
நமக்குக் கொடுத்த பாக்கடல் கம்பன்
ஆக்கிய கவிதைத்துளியுள் ஒன்றில்
சமுத்திரம் அடக்கிச் சபையேறி வந்தேன்.

கம்பன் சரக்குத்தான்- ஆனாலும்
கொண்டு வரும் வழியில்
கொஞ்சம் கலப்படங்கள்..!

சங்கமிப்பதுதானே
கடலின் இயல்பு!

உப்புக் கரித்திருக்கும்
உவர்நீரில் மீனிருக்கும்
குறிஞ்சிமலை-
உச்சியில் நின்றிருக்கும்
மரத்தின் என் தேன் இருக்கும்
தேனும் மீனும் அமுதினுக்கமைவதாய்த்



திருத்திக் கொணர்ந்த
குகனுக்குள் நானிருப்பேன்!

முல்லை தழைத்திருக்க
மருதம் செழித்திருக்க
பாலை நிலம் இல்லாமல்
பார்ப்பதற்கு ஆசை கொண்டு
வானத்தின் மீதேறி
மேகமென உலா வருவேன்!

சாக்கடை நீராக்கிவிட்ட
சங்கடத்தால் சுருக்குண்டு
அணைக்கட்டுக்குள் என்னை
அடைத்து வைக்கத் துடிப்பதுவும்,
ஆக்கப் பணிவிட்டு
அரசியலால் மாள்குவதும்,
என் நீரைச் செந்நீராய்
எப்போதும் ஆக்குவதும்,
உங்கள் இயல்பென்று
கண்டதனால் வெறுப்பேறி
நதியாக நான் ஓடிக்
கடலாகிப் பின் விரிந்து
கரையேறி வருகின்றேன்;
காறி உமிழ்கின்றேன்!

ஐயய்யோ மனிதனைப்போல்
ஆகிவிட்ட வருத்தத்தில்
வாயடக்கிப் போகின்றேன்;
வந்தவழி மீள்கின்றேன்!

உலகைப்போர்த்த என்
நீலப்புடவைக்குள்
உப்பும் உண்டு;
சிப்பியும் உண்டு;
முத்தும் உண்டு;
பவளமும் உண்டு!

ஆயினும் கம்பன்
ஆழியாய் நிறைகையில் என்
ஒவ்வொரு துளியும்
அமுதம் அமுதம்!

கம்பகாவியக் கடலுள் இருந்து
விழுந்த துளியாய்
இலங்கை!

இந்திய மண்ணின்
இதயத்தில் இருந்து
கசிந்து விழுந்த
கருணைத்துளி-அது



பின்னர்
காகுத்தன் மனைவி
கற்பு நெருப்பினுக்கு
ஆகுதியான அவசரத்தில்
அது ஒரு
தீத்துளி!

அரக்கிமார் கண்ணீரும்
அரக்கர்களின் வெந்நீரும்
கூடித் திரண்ட குடுவை!

அன்னை சீதை
அமர்ந்து தவம் புரிய
நெய்தல் நான் கட்டிய
அசோக பீடம்!

அதுவே,
அமைதியின்றித்
தவித்த சானகியின்
தனிப்பெரும் இதயம்!

சரித்திர சோகம்
நிறைத்த சமுத்திரத்
துளியாம் அதனுள்
புதைந்து கிடக்கும்
இரகசியங்கள் அநேகம்.



சொல்லிச் சொல்லியும்
மாளாமல் கரை மோதிச்
சோகத்துடன் திரும்பும்
என் கவிதை அலைகள்
தீவின் நடுவில் தனித்த சீதையின்
சோகம் சொல்லிக்
காற்றின் வழியே
தூது விட்டவள் நான்!

சீதையை மட்டுமே
சிந்தித்துக் கொண்டிருந்த
இராம இதயத்திற்கு
அமுதம் ஒத்த சீதையின் சுவாசத்தைக்
காற்றின் மூலம்
கரையேற்றி விட்டவள் நான்!

எத்தனை நாள் தவமிருந்தேன்;
உத்தமி சீதையினை
யுத்தமின்றி இராமனிடம்
ஒப்படைக்க ஆசை கொண்டு..!

இன்னொன்றும் சொல்லவேண்டும் –

அன்னை சீதையினை
அடைய வேண்டும் என்பதற்காய்-எம்



மன்னன் இராவணனோ
சிறை எடுத்துப் போகவில்லை.

அண்ணல் இராகவனை
அபகரிக்கும் எண்ணத்தால்
முன்னர்க் கண்டு
மோகித்த சூர்ப்பணகை
இன்னல் சீதைக்குப்
பின்செய்வாள் என அஞ்சி
மன்னன் இராவணன்
அன்னை சீதையை
மண்ணோடு பெயர்த்து வந்து
மகளிரைக் காவல் வைத்தான்
முதன் முதலில்
'மகளிர் காவல் நிலையம்'
அவன் தான் அமைத்தான்.

அந்தப்புரத்திலா
அடைத்து வைத்தான்
யோசியுங்கள்.

பஞ்சவடி வனத்திருந்து
பாதுகாப்பாய்ப் பெயர்த்துவந்து
அசோகவனத்தினிலே
அரசாட்சி புரிய விட்டான்!

அமைச்சருக்கு நிகரான
திரிசடையைத் துணைக்கு வைத்தான்.

ஆனாலும்...
வானத்து மேனகையும்
ஊர்வசியும் அரம்பையரும்
காலுக்கடியில் நின்று
கரங்குவித்துக் கெஞ்சுகையில்
நெஞ்சம் நிமிர்ந்து
நின்றிருந்த இராவணன் தான்
மானத்தை வீரத்தை
மதிப்புள்ள அனைத்தையுமே
காமத் தேவதைக்குக்
காணிக்கையாக்கிவிட்டு
கைகேயி மருமகள் முன்
கையேந்தி நின்று விட்டான்;
கால்களிலும் விழுந்து விட்டான்!

சிறையெடுத்த-
அன்றந்தப் போதில்
அண்ணல் இராகவனைக்
கண்டிருந்தால் இவனுள்
கனன்று கொண்டிருக்கும்
காமம் போயிருக்கும்;
கடல் இலங்கை மீண்டிருக்கும்;



நாமம் நின்றிருப்பேன்;
நாளும் களித்திருப்பேன்!

ஆனாலும் ஒன்று சொல்வேன் -

நாற்புறமும் இலங்கையினை
நான் சூழ்ந்திருந்தாலும்
ஆர்ப்பரித்து இராவணர்க்குள்
அடங்காமல் எரிகின்ற
மோகவல்லி சூர்ப்பணகை
மூட்டிவைத்த காமத்தீ
அணைப்பதற்கு முடியாத
அவலத்தைத் தினந்தோறும்
இராமனிடம் சொல்லுதற்கே
கரையோடி வந்திடுவேன்;
காணாது திரும்பிடுவேன்!

இராம பாணம் பருகிய பிறகும்
இராவண காமம் அடங்காமல்
புவிமீது
எங்கெலாம் பெண்மை
இடர்ப்படுகின்றதோ,

எங்கெலாம் மானுடம்
கண்ணீர் சிந்துமோ,

எங்கெலாம் கருணை
இறந்து படுமோ,

எங்கெலாம் வன்முறை
பற்றி எரியுமோ,

எங்கெலாம் அநீதி
ஆட்சிபுரியுமோ,

அங்கெலாம் வந்து
அசுரப் பசியுடன்
விழுங்கிப் பூமியைப்
புதிதாய்ச் சமைப்பேன்!

பிரளயம் என்று
உலகம் பேசும் -அது
நிகழும் முன்னர்
நீங்கள் திருந்துங்கள்;
நிலை பெற்று வாழுங்கள்!

- புதுக்கோட்டைக் கம்பன் கழகக் கவியரங்கில் கவிஞர் சொ. சொ. மீ. சுந்தரம் தலைமையில் பாடிய கவிதை (2004)







"வேலையுள் இலங்கை என்னும் விரிநகர் ஒருசார் விண்தோய்
காலையும் மாலைதானும் இல்லதுஓர் கனகக் கற்பச்
சோலை அங்குஅதனில் உம்பிபுல்லினால் தொடுத்ததூய
சாலையில் இருந்தாள் ஐய, தவம்செய்த தவம்ஆம் தையல்"

(சுந்தரகாண்டம் : 6037)



## தவம் செய்த தவம்

பொன்னணி அனைத்தும் நீக்கிப்
புகழொடு இகழும் போக்கித்
தன்னுணர் வகற்றிச் சீதை
தலைவனை எண்ணி யெண்ணிக்
கண்மணி சிந்தித் சிந்திக்
காதலால் உள்ளம் பொங்கிப்
பெண்மையின் நலமே ஓங்கப்
பெருந்தவம் இயற்றுகின்றாள்!

மானின்பால் கொண்ட மையல்
மைத்துனன் நோகச் சொல்லி
மானின்பின் போகச் செய்த
மடமையாம் பிழைகள் நீங்கக்
கானில்பல் லரக்கி சூழக்
கடலலை முழங்கும் லங்கைத்
தீவினில் அன்னை சீதை
நோற்குமா தவந்தான் என்னை?

“இன்னுமா உலகில் சீதை
இருப்பள்? என்றையங் கொண்டு

மன்னவன் இராமன் நொந்து
மற்றுந்தன் தம்பி யோடு
தன்னெழில் நாடு நோக்கித்
தவப்பணி முடித்தோ போனான்?
என்னிலை என்ன வாகும்?
இருத்தலின் இறத்தல் நன்று!"

என்றுதன் மனது கூற
இருப்பிடம் அகன்று மெல்லத்
தென்னகர் இலங்கை நோக்கித்
திரும்பினாள் கண்ட காட்சி
தன்னுளே எழுப்பு கின்ற
தர்க்கத்தை எண்ணி யெண்ணித்
தன்னையே நொந்து கொண்டாள்
தருணமோ இனியும் வாய்க்கும்?

'வருவான் இராமன்'எனச் சொல்லி
'வாரான் இராமன்' எனவோடித்
தெருவில் ஆடும் சிறுபிள்ளைச்
செயல்போல் ஆடும் கடல்கண்டு
பொறுமை நையப் புலன்ஒ டுங்கப்
பெருமூச் செறிந்து மனம்வாடக்
கருணை இராமன் திருவெண்ணிக்
கணங்கள் தோறும் தவஞ்செய்தாள்!

வான் கண்டால் இராமன்; வீசும்
மணம் எல்லாம் இராமன்; வந்து
மீள்கின்ற அலையைக் கண்டால்
இராமனே! கண்ணை மூடித்
தான் கண்ட பொருளில் எல்லாம்
இராமனே திகழக் கண்டும்
'ஏன்இன்னும் வாரான் இராமன்?'
எனும்வினா உயிர்து ளைக்கும்!

'உலகெலாம் எரிப்பேன்' என்று
ஒருமுறை நினைக்கத் தோன்றும்!
'உலகில் ஏன் வாழ்வு?' என்று
ஒருமுறை பிறழ்வு தோன்றும்!
அலகிலா ஆட்டம் கொண்ட
ஐயன்பால் வைத்த நேயம்
நிலையிலா நெஞ்சில் எங்கோ
நெருப்பினை வைத்து வேகும்!

இரவொடு பகலும் தோன்றும்;
இன்னல்செய் மாலை தோன்றும்!
கரவிலாக் காலை தோன்றும்;
கவலையும் கூடத் தோன்றும்!
வரவிலாச் செலவே போல
வைகலும் அல்லல் தோன்றும்;
'வருகிறான் இராமன்' என்ற
வரமொன்றைத் தவிர எல்லாம்!



நிலையிலா வாழ்வு! நித்தம்
நிறையிலா ஊனம்! மண்ணில்
தலையிலா உடலைப் போலே
தாண்டவம் ஆடும் உள்ளம்!
கலையிலாச் சிற்பம் ஒத்த
கல்லெனும் யாக்கை! முன்பு
அகலிகை போலே தானும்
ஆகவோர் வழிவாய்க் காதா?

இலையொரு பக்கம் நிற்க,
இன்னொரு பக்கம் நாளும்
தலையொரு பத்தை ஏந்தித்
தனிப்பெரும் படைகள் சூழ
அலையொலி இலங்கைக் கையன்
அரற்றுமோர் காமம் கேட்கத்
தலைவலி பெருகும் ஐயோ,
தாங்குதல் கொடுமை ஐயா!

'உடலினைத் தின்பேன்' என்பான்;
'உயிரினைக் குடிப்பேன்' என்பான்;
'கடலினைத் தாண்டி உன்றன்
கணவனோ வருவான்?' என்பான்;
'மடந்தையே உன்னை ஆளும்
மணாளன் நான்' என்பான்; பின்னும்
படமெடுத் தாடும் நாகப்
பாம்பெனச் சீறிப் போவான்!

விட்டதோர் இடத்தைப் பற்றி
விரிவுற அதட்டு கின்ற
துட்டமார் அரக்கர் கூட்டத்
தேவியர் சூழ நிற்கும்
கட்டமாம் வனத்துள் அன்னை
கண்களில் இராமன் தன்னை
இட்டமாய் வைத்து ஏங்கும்
ஏழைமை பேசப் போமோ?

உணவொடு உறக்கம் போக்கி
உயிரினை உடலில் தேக்கிக்
கணவனை நெஞ்சில் ஆக்கிக்
கணந்தொறும் இராம நாமம்
உணர்வினில் ஓட வோடும்
குருதியில் உறுதி சேர்த்து
அணிமயில் அன்ன சீதை
ஆற்றுமா தவந்தான் என்னை?

குரக்கரை, அரக்கர் தம்மில்
குணமிகக் கொண்டோர் தம்மை
ஒருப்படத் திரட்டி, வாழும்
உலகினை நையப் பண்ணும்
அரக்கரை ஒழிக்க அண்ணல்
இராமனை இயக்கத் தேவி
இயற்றிடும் தவத்தைப் பேண
இலங்கைசெய் தவந்தான் யாதோ?



அன்னையோ இவளுக் கில்லை;
    ஆயினும் அரக்கர் செய்த
முன்வினைப் பயனே வந்து
    முகிழ்த்ததோ, பெண்ணாள்; நல்லாள்;
கண்மணி திரிச டைப்பெண்,
    கருணையால் உயிர்த்தாள்!- அன்னை
பெண்மையின் நலம்வி ளங்கப்
    பெருந்தவம் புரியல் உற்றாள்!

வேறுள குழுவை யெல்லாம்
    மானுடம் வெல்லல் வேண்டித்
தானொரு தனியள் ஆகித்
    தாங்கரு துயரம் ஏந்தி
மானொரு பொருட்டாய் வைத்து
    மன்னனைப் பிரிந்து வந்து
வானவர் ஏத்த அன்னை
    புரிகின்ற தவந்தான் என்னை?

உலகெலாம் எண்ணி யெண்ணி
    ஒய்விலாத் தவங்கள் பண்ணிப்
பலப்பல பிறவி பெற்றும்
    பற்றிட முடியாப் பாதம்
இலகுவாய் இறங்கி வந்து
    இன்னருள் புரியச் செய்த
அலைமகள் சீதை ஆற்றும்
    அருந்தவம் போற்றிச் செய்வாம்!



<u>காவியம்</u>

"சிறகிலிருந்து பிரிந்த
இறகு ஒன்று
காற்றின்
தீராத பக்கங்களில்
ஒரு பறவையின் வாழ்வை
எழுதிச் செல்கிறது''

-பிரமிள்



## சீதாயணம்

### 1

கம்பன் வீட்டு முற்றத்தில்
நேற்று
காத்திருந்தேன் ஒரு
கவிதைக்காய் நெடுநேரம்!

மெல்லச் சுழன்று வீசிய காற்றொரு
சின்ன இறகினை என்
கரத்தில் சேர்த்தது.

இதிகாசக் காலத்தில்
இருந்ததோ இல்லையோ,
கம்பன் காலத்தில்
கவிதையாய்த் துளிர்த்தது.



தொடர்ந்த காற்றினில்
இங்கும் அங்குமாய்
உதிர்ந்தன உதிர்ந்தன
பசுங்கிளிச் சிறகுகள்.

சேர்த்துப் பிடிக்கச்
சித்திரம் ஆனது.

2

எத்தனை கிளிகள்
கம்பச் சோலையில்.

சீதை
தானே பேசும் கிளி.

திரிசடை
கனவு காணும் கிளி.

கிளி வேஷம் போட்ட கழுகு
சூர்ப்பணகை.

தாய்க்கிளி
கோசலை.



தனியொரு பாசத்தால்
போர்க்கிளியான
புயற்கிளி
சுமத்திரை.
கூனியக்கிழவி
வளர்த்த கிளி-
இல்லை
வளைத்த கிளி
கைகேயி!

அறுபதினாயிரம் கிளிகள்
தசரதச் சிறையில் தம்மைக்
கருக்கிக் கொண்டன.

கிளி விஷயத்தில்
குரங்குகள் அடித்துக் கொள்ள
விதவைக் கிளி
தாரை.

இந்திரப் பூனை
அகலிகையைக் கவ்வியது.

இராவணப் பூனை
சீதையைக்
கூண்டோடு பெயர்த்துக்
கொண்டு போனது

(அது
சைவப் பூனை)

கிளியை வளர்த்தவள்
கிளியாகிப் போனாள்.

3

எல்லாக் கிளியும்
'அக்கா' சொல்லும்.
இந்தக் கிளியோ
'சீதா' சொல்லும்;
சில சமயம்
'சீதா ராமா'
சேர்த்துச் சொல்லும்.

இலக்குவன் மனைவி
பழங்கொண்டு தருவாள்;
பரதனின் மனைவி
பால் கிண்ணம் நீட்டுவாள்;
சத்ருகனன் மனைவி
சாப்பிடாதிருப்பாள்.

சித்தியருக்காக – அச்
சின்னஞ்சிறு கிளி
பாலினைப் பருகும்!

சிவந்த மூக்கால்
பழத்தைப் பிளக்கும்போது
இராமனின் முன்னால்
சீதையின் சிவந்த
கன்னங்கள் தோன்றும்
சிந்தனையில் மூழ்கும்.

பொருதும் விழிகள் ஓரத்தில்
மரவுரி தரித்த
பரதன் உருவம்
சுருங்கும்.

"நின் பிரிவினும் சுடுமோ
பெருங்காடு !" - என்று
சீதை
கிளம்பியபோது
பேச்சு வரவில்லை கிளிக்கு.

வந்திருந்தால்
இலக்குவ ஆர்ப்பாட்டம்
இதனிடம் தோற்றிருக்கும்.

மேலும்,
பறக்கத் தொடங்குமுன்- சீதை
வளர்க்கத் தொடங்கியதால்

இதற்கு
நடக்கத்தான் தெரியும்.

காட்டை
கனவிலும் பார்த்தில்லை.
(அரண்மனைக்கிளி)

சீதையைப் போலவே,
இக்கிளிக்கும்
தந்தை தாய் பெயர் தெரியா.

வளர்ப்பு மகள் சீதை
வளர்த்த மகள் இக் கிள்ளை
இராமனுக்கு மூத்த பிள்ளை.

இது கருதித்தானோ,
வளர்ப்புத்தாய் பெயரையே
வைக்கச் சொன்னான்
இராமன்.

செல்லமகளைச் சீதை
பெயர் கூவி, ஏவி
வேலை வாங்கியதில்,

ஊடல்பொழுதில்
உரத்துத் திட்டியதில்,



மாமி கைகேயியை
வஞ்சந்தீர்ப்பதாய்

மந்தரையின்
நெஞ்சம் கூனியது.

'சாமியார் சொன்னதற்காய்த்
தாடகையைக் கொன்ற இவன்
மாமியார் குறித்து
மனைவி சொல் கேளானோ?'

ஐயக் கேள்வி
அவளையே வளைத்தது.

அப்புறமென்ன,
சீதையைப் பிரித்தது.

கிளியும் பரதனும்
உருகுவது இந்தக்
கிழவிக்கும் தோழிக்கும்
எப்படிப் புரியும்?

'பிரிக்கத் துணிந்த மாமியின்
பெயர் தனக்கு
விதிக்கப்பட்டதால்



மறக்கப்பட்டேனோ?
சீதையால்
துறக்கப்பட்டேனோ?'
நினைந்து உருகும் கிளிக்காதில்
சுமந்திரச் சொற்களாய்ச்
சீதை நிரம்புவாள்...
"...அரசர்க்கு அத்தையர்க்கு
என்னுடைய வணக்கம் முன்னியம்பி
பொன்னிறப் பூவையும்
கிளியையும் போற்றுக என்று
உன்னும் என் தங்கையர்க்கு
உணர்த்துவாய்...."

பகற்கனவு காணப்
பழகிக் கொண்டது கிளி.

4

'காண்பது கனவா
நனவா?'
புரியவில்லை சீதைக்கு

கணையாழி தருகிறான்
இராமகாதை கூறுகிறான்
வானுயர நீளுகிறான்
வானரமாய் நிற்கிறான்!



பொன்மான் குறித்த
நடுக்கம் இன்னும் நிற்கவில்லை
சானகிக்கு.

கிளி வளர்த்த ஆசையினால்
மான் வளர்க்க ஆசை கொண்டு
கேட்டது குற்றமா?

பிள்ளையாய் வளர்த்த இலக்குவன்
திடீரென்று
மாமியார் போல
மறுக்கலாகுமா?

“நாயக நீயே பற்றி
நல்கலை போலும்'' என்று
ஊட்டியதும்,
பின் விளைவின் உணர்ச்சியினால்
“நிற்றியோ இளையோய் ஒருநீ...”
என்று ஏவியதும்

நினைக்க நினைக்க
நெருப்பு.
ஆறுதல் கூறிய
அனுமனிடம் பேசுகையில்
கிளி
ஞாபகத்துக்கு வந்தது.

"என் ஓர் இன்னுயிர் மென்கிளிக்கு
யார் பெயர் ஈகேன் மன்ன
என்றலும்,
மாசு அறு கேகயன் மாது என்
அன்னை தன் பெயர் ஆக என,
அன்பினொடு அந்நாள்
சொன்ன மெய்ம்மொழி சொல்லுதி...."

பின்னர்
கிளி சாட்சியாய்
இராமனுடன் அவள் பேசும்
கனவுகளுக்கு
நிஜம் பூசினாள் திரிசடைப் பெண்ணாள்.

5

பற்றி எரிகிறது தீ
சுற்றிச் சுற்றி வருகிறான்
பரதன்-

ஒரு கணம் இராமன்
சமயத்தில் சீதை
இறங்குவதுபோலும்
எரிகிற தீ
அலறுவது போலவும்



கிளியின் குழப்பக் கனவு விலக்கிக்
குரங்கு குதித்தது-
"அய்யன் வந்தனன்
ஆரியன் வந்தனன்..."
"அப்போ சீதை..?"
தீனக்குரலில்
முனகிய கிளி உன்னித்துக் கேட்டது.

குரங்கு கூறிய கதையில்
சீதை
இறங்கினாள் தீயில்...!

சிறகுகள்
உதிரத் தொடங்கின.

சிறகிலிருந்து
உதிர்ந்த இறகொன்று
காற்றின் தீராத பக்கங்களில்
சீதாயணத்தை
எழுதிக் கொண்டிருக்கிறது!

-சென்னைக் கம்பன் கழக வெள்ளிவிழாநிறைவுக் கவியரங்கில்
கவிஞர் வாலி தலைமையில் வாசித்த கவிதையிலிருந்து. 12. 08. 2000.



“உன்னைமீட்பான் பொருட்டு, உவரிதூர்த்து, ஒளிர்
மின்னைமீட்டுறு படைஅரக்கர் வேர்அற,
பின்னைமீட்டு,உறு பகைகடந்திலேன்; பிழை
என்னைமீட்பான் பொருட்டு இலங்கை எய்தினேன்’’

(யுத்தகாண்டம் : 10014)



# அக்கினிப் பிரவேசம்

1

நள்ளிரவில்
திடுமென விழித்துக் கொண்டான்
இராமன்!

எப்போது தூங்கினான்
யாருக்குத் தெரியும்?
இரவும் பகலும் சக்கரமாக
ஓடும் காலம்.

எதிர்காலம் சூனியமாய்
இறந்தகாலம் நினைவுகளாய்
நிகழ்காலம் மீது
எழுதிய கிறுக்கல்களில்
அகாலமாகிப் போனான் அவன்.

வேதமுதல் அவன்–
முடிவு தெரியாமல்
வான் நோக்கிப் பார்க்கிறான்.



நட்சத்திரங்கள்
கேலி பேசுவதாகத் தோன்றின.

நல்ல வேளை நாட்டில் இல்லை.
நாடு
கேவலமாய்ப் பேசாதோ?

செடியும் கொடியும் புல்லும் பூண்டும்
'இல்லை சீதை' என
ஏளனம் பேசுகையில்
எதிர்ப்பட ஓடும்
மான்கணம் நோக்குகையில்
புலப்படாநிலையில்
எழும் மன உணர்வுகளை
எப்படி முறைப்படுத்த?

இது கோபமா?
விரக்தியா?
கையாலாகாத கேவலமா?

அரவம் அடங்காக் கடலின் மீது
சலனம்இலாது உறங்க முடிந்தாலும்
அமைதி உறங்கும் கானகம் தன்னில்
எங்கே உறைந்தது தனது உறக்கம்?



ஆதிசேடனே இலக்குவனாகி
இமைத்தல் மறந்து
எதிர் நிற்கின்றானோ?

கட்டிய கைகள்
பாதம் மட்டுமே
பார்த்துக் குனிந்த தலை
இரண்டு கண்களும்
இமையாது தன்னையே
மனச்சாட்சிபோல நோக்கும் அன்பு -

தாக்கத் தாக்கத் தன்மீதும்
சீதையின்மீதும்
தாங்கொணாச் சினம்
பொங்கிப் பொங்கிப்
பெரு மூச்சாய் வெளிக்கிளம்பத்
தவித்துப்போனான்
தசரத புத்திரன்!

இதனையும் -
'பிரிவால் வெளிவந்த
பெருமூச்சு' என்று
இலக்குவன் எண்ணுவனோ
என்று கிளம்பும்
இன்னொரு பெருமூச்சு-

அந்தத் துயரிலும்
வியக்காமல்
இருக்க முடியவில்லை
தந்தையாய்ப் பிறந்த
தசரதன் குறித்து-

தன்னைப் பெற்றிட
அறுபதினாயிரத்து
மூவரிடம் கூடி அந்தத்
தனிமனிதன்
எத்தனை பாடு
பட்டிருக்கக் கூடும்?

ஐயோ,
அன்னை கைகேயிக்கு
என்ன கைம்மாறு?

மாண்ட தந்தையின்
சடங்குகள் முடிந்ததும்
அன்னையர் அந்த
அறுபதினாயிரம்
பெண்டிரும்
உடனே
எரியும் கொள்ளியில்
இறங்கி

அயோத்தி முழுக்கப்
பரவிய புகையில்
தங்கள் ஆவியைக் கரைத்தது
காணவும் முடியுமோ?

செவிப்பட்டபோதே
துடிதுடித்துப்போன தன்னால்
நின்றிருக்க முடியுமோ
நேர்பட ஆங்கே?

அன்னை கைகேயிக்கு
என்ன கைம்மாறு?

அந்தக்கணத்திலும்
தன்நோக்கு மாறாது
எப்படி முடிந்தது அவளால்?

அது கிடக்கட்டும்.

தந்தையொடு சேர்த்து
அறுபதினாயிரத்தோர்
உயிர்களைக் காவு
வாங்கியபிறகும்
கூனியின் மனம் நிமிராக்
கொடுமையை
யாரிடம் சொல்ல?



அன்றே தோற்றது
அவன்கை வில்லே!

அதற்குப் பின்
மராமரம் ஏழும்
துளைத்து என்ன பயன்?
மறைந்து நின்று வாலியைக்
கொன்றது குறித்த
குற்ற உணர்வெதற்கு?

இன்னும் கதிரவன்
விழித்திலன்;
அவன் கொடுத்து வைத்தவன்!

மனத்தொடு சேர்த்து
நாவும் உலர்ந்தது
தனக்கே உறைக்கவில்லை
எப்படி உணர்ந்தான் இலக்குவன்-
"அண்ணா, நீர்!"

கருணையாய்க் குளிர்ந்த
நீரைப் பெறுகையில்
துளிர்க்கும் கண்ணீர்-

ஐயோ,
இலக்குவன்



சீதையின் பிரிவால் சிந்திய கண்ணீர் எனப்
பிழைபட உணராது எப்படித் தடுப்பது?

குழப்பத்தோடு
அவன்முகம் நோக்குகையில்
சலனமற்று அதே
ஆதிசேடப் பார்வையோடு-
என்ன செய்ய வேண்டும்?'
என்ற வினாக் குறிப்போடு.

தாங்கத் தன்மேனி
தரமுடியவில்லை என்று
ஏங்கித் தவிக்கிறது போலும்
அவ்வுள்ளம்?

இத்தனை அன்பு
தன் மீது மட்டும் ஏன்?

தலையில் அடித்துக் கொண்டு
அழவேண்டும் போல்
தோன்றியது இராமனுக்கு.

அவதாரம் ஆனாலும்
மனிதன் தானே..?



2

சுருக்கெனச் சுட்டன
சூரியக் கதிர்கள்.

எத்தனை அவமானம்?
இத்தனை நேரம் எப்படி?

நிச்சயம்
இது தூக்கமில்லை.

சீ!
இலக்குவன்
காலை உணவாகப்
பழங்களோடு
கிழங்குகளையும் தேனையும்
சேகரித்து வைத்துக்
கட்டளைக்குக் காத்திருக்கும்
வரைக்கும்?

குற்ற உணர்வோடு
ஆற்றங்கரை நோக்கி
ஓடத் தொடங்கின
கால்கள்.

காலைக்கடன்.



விரக்திச் சிரிப்பொன்று
இராம இதழ்களை
ஓசையின்றிப் பிளந்தது.

காலை-கடன்
இந்தக் காலமே கடன்.

எப்போது கழியும்?

3

"அண்ணா?"

திடுக்கிட்டுத் திரும்பியபோது
இது எத்தனையாவது அழைப்பென்று
அறியமுடியாத அவலம்.

"மன்னிக்க...மன்னிக்க வேண்டும்.
பழங்களைப் பிதுக்கிவிட்டு
விதைகளை....!
குற்றம் பொறுத்தருள வேண்டும்
புறத்தோல் நீக்கிய கைகளால்
இவ் அகவிதைகளையும்
அகற்றிடாத குற்றம் என்னுடையதுதான்!"

எப்படி எங்கே
இதையெல்லாம் இந்த
இளையவன் கற்றான்?
உட்பொருள் வைத்து ஒரு
கவிதையைப் போல அவன் உரை-

கண்ணாடி போலத்
தன் சிரிப்பைப் படம் பிடித்து
இலக்குவன் சிரிப்பது ஆறுதல்...

ஓசையின்றி அபயகரம்
காட்டுவதைத் தவிர வேறென்ன செய்வது?
ம்ஹூம்..!

தம்பியர் துணையோடு
குருதேவர் மனைதேடிக்
கல்வி கற்கப் போன அந்தநாட்கள்...

அப்போதே இவன்
நிழலாகத்
தொடர்ந்தவன் ஆயிற்றே..!

கருத்த தன்மேனியைப்
பின்தொடரும்
நிழல்



நிறம்
அழல்!

சிரிப்பு வந்துவிட்டது
சீதை கேள்வனுக்கு.

நெடுநேரம் பொருள்தேடித்
தோற்ற சோகத்தில்
இலக்குவன் இதழிலும் மின்னல் கீற்று.

உடன் கவ்வும் சோகம்
இணைந்து சிரிக்க
அன்னை நிகர்த்த அண்ணியார் இல்லையே...

கிரகணம் விழுங்கிய முழு நிலாப்போல
அண்ணன் முகம் சுருங்க
அனுமதிக்கலாகாக்
கவலையோடு தவம்
புரியத் தொடங்கிவிட்டது
இலக்குவ உள்ளம்.

கரங்களோ,
மயிலிறகு தந்த
விசிறியை அசைத்தபடி...



ஐயோ,
பக்கென்று நின்றுவிட்டதே
அண்ணலின் சிரிப்பு-

தவறு தன் மீதுதான்
இந்த விசிறியின் இறகு
அண்ணியார் நினைவை
அண்ணலுக்குள் எழுப்பி...

சொல்லற்று
மன்னிப்புக் கோரி மறுகுகின்றது
இலக்குவ உள்ளம்...

அண்ணலின் எண்ணத்தை
அவனுக்கு உணர்த்தும் வகை
தெரியாத துயரத்தில்
மறுகிக் கொண்டிருக்கிறது
இராமன் விட்ட பெருமூச்சு.

என்னவோ சொல்லி
இசைக்கிறது குயில்
சோகமாய்...!



4

வழக்கம்போல
விசாரணை விளக்கங்கள் -
பொருளற்றுப் போய்க்
கழிந்தது பொழுது.

"நிச்சயம் தூதர்கள்
நினைத்தது முடிப்பர்
அண்ணியார் தங்களை
அடைவது திண்ணம்...!"

திரும்பத் திரும்பக்
கேட்டுத் தேன் போலத்
திகட்டிப் போய்விட்டது
இலக்குவன் குரல்.

ஒருபொழுது
ஒருபொழுதேனும்
தன் துணையை இலக்குவன்
எண்ணியிருக்கவே மாட்டானா?

என்ன கொடுமையிது
எல்லாரும் தனக்காக!

தனக்காகவேவா?



அன்னை சுமித்திரையார்
சொல்லிய வாசகம்–
"மகனே! இவன்பின்செல்
தம்பி எனும்படி அன்று.
அடியாரின் ஏவல் செய்தி!"

விதிக்கு விதி செய்யக்
கிளம்பிய இளவலை
விதிபடுத்தும் பாடு
விளம்பவும் முடியுமோ?

'விதியே விதியே அருள் செய்
இனி நான் தம்பியே ஆகித்
தன்னிகரற்ற
இலக்குவன்மாட்டு இவ்வன்பு புரிந்திட..!'

'இறைவனே வரம் வேண்டிப்
புலம்புவது குறித்து
யாரிடம் சென்று
முறையிடுதல்?' என்று
விதி குழம்பிப் போய்
ஒரு மரநிழலில் ஒதுங்கியது.

மாலைக்கடன் கழிக்க
இராகவன் போயினன்!



5

இரவு இத்தனை கொடியதென்று
இதற்கு முன்பு, தான்
உணர்ந்ததில்லைதான்.

இஃது ஒன்றும்
விரகதாபம் இல்லை.
விரக்தியும் இல்லை.

எதுவும் செய்யாது
சவமாய்
உறைந்து கிடப்பது எத்துணைப்
பெருந் தண்டனை?

தன்னைத் தானே உணர்ந்து கொள்ள
இப்படி இருப்பது தான்
தவமா?

மனசாட்சியோடு
வாழ அஞ்சித்தான்
மனைவியை உடன் கொண்டு
மனிதன் வாழ்கிறானோ?



அப்பப்பா,
பூமி–
அனுபவப் பல்கலைக் கழகம்.

'பூமியில் பிறக்கக் கடவாய்' என்று
நாம் வானத்திலிருந்து
வழங்கிய தீர்ப்பினைக்
கேட்டு வந்தோரெல்லாம்
போற்றி உருவேற்றித்
தந்த பரிசுதான் இந்தத் தனிமையா?

தனக்கே இப்பாடு
என்றால் சீதை?

'பிரிவினும் சுடுமோ பெருங்காடு?' என்றவள்
எங்கேயோ தனிமையில்
எப்படியோ?

ஒரு மலடியின் கையில்
குழந்தைப் பொம்மையைப் போல்
வில் தனக்கு ஒரு கேடு
என்று
உலகு சிரிப்பதை
மொழிபெயர்த்துத் தனக்கு
உணர்த்துவன போலும்
இந்த விண்மீன்கள்..!



சீதையின் ஞாபகம்
வந்து விடாதபடிக்கு
நிலவு முகிலுக்குள்
பதுங்கிப் பதுங்கி
என்ன பயன்?
துகிலிட்ட அவள்
முகமதியை
எப்படி மறப்பது?

உண்மையில் இது
பிரிவே இல்லையே..?

முழுக்கவும் தன்னுள் நிரம்பித்
தகாதன செய்யும்
அம்மின்னலாள்
என்ன பாடுபடுவாள்?

கன்னிமாடத்தில் நின்று
கண்டபிறகு
அவள் பட்ட பாட்டை
அப்படிப் புலம்பியவள்
இப்போது எப்பாடு படுவாள்?

அது கிடக்கட்டும்-
தன்னை மட்டுமே கானகம் செல்லக்

கட்டளை பிறப்பித்த
அன்னை கைகேயி
உடன் இவளும் இளவலும்
கிளம்பியதை
எப்படி அனுமதித்தாள்?

தாடகை வதம் முடித்துத்
தம்பியொடு மீண்டதுபோல்
இப்பயணம் முடியாது
என்று கருதித்தான்
தந்தை
இறக்கத் துணிந்தானோ?

தாய் ஏன்
இரக்கந் துறந்தாளோ?

இரக்கம் பெண்மைக்கு
இயல்பே இல்லையா?

ஆணின் பலவீனம்
அதுதானா?

அங்கேயிருந்துதான்
பெண்ணின் ஆளுமை
வீரியம் பெறுகுதோ?



அன்பில் இருந்து இரக்கத்தை
அகற்றுவது தான்
அறமோ?

உண்மையில்
பெண் யார்?

தாடகையா?
அகலிகையா?
கேகயத்தியா?
சுமித்திரையா?
கோசலையா?
கூனியா?
காமவல்லியாக வந்த
சூர்ப்பணகையா?
தாரையா?
தன்னைத் தவிக்கவிட்ட
சானகியா?
யார் பெண்மை?
எவர் உண்மை?

சூனியம் வெறித்த கண்களுள்
சுழலும் அந்தப்
பழைய நினைவுகள்...

6

காற்றினும் கடிய வேகத்தோடு
இராமனின் செவிகளை
நிறைத்தது
'தென்திசையிருந்து
வந்தனன் அனுமன் ..!'

கனிவாய்ச் சீதை வந்தது
போன்ற செய்தி - என்று எண்ணி
முடிக்குமுன்னர்
இலக்குவன்பின் வந்து
முன்னின்று விட்டான்
அனுமன்.

'முக'வரி படிக்க முடியாதபடிக்கு
அனுமன்
படக்கெனத் திரும்பி
தன் திசையில்
பாதம் ஊன்றித்
தென்திசைநோக்கித்
தெண்டனிட்டான்...

அப்பாடா,
'இவன் கண்டதும் உண்டு
அவள் கற்பும் நன்று!'



உலக வாய் அடைக்கப் போதும்-
காற்றின் மைந்தனின்
கதைப்பில்
அடுக்கடுக்காகத்
திட்டங்கள் தோன்றின.

மீட்புப் பணிகள் மும்முரத்தில்
கடல் தோற்றது.

7

எத்தனை முயன்றும்
தன்முயற்சி தோற்றது
துன்பம் தான்.

என்ன நினைத்துக் கொண்டிருக்கின்றான்
இராவணன்?

இன்னமும்
பிள்ளைப் பிடிவாதம் ஏன்?

'இன்று போய்ப் போர்க்கு
நாளை வா'
என்றது தவறோ?



போர்கருதி ஒன்றும்
தான் கூறிய மொழி
அஃதன்றே!

தென்னிலங்கை முற்றும்
ஒரு பெண்காமத்தால்
அழியத்
தானும் ஒரு காரணமாகிய
அவலம் பிசைகிறது.

தன் காமம் (இல்லை. ஆனாலும்) போக்கிப்
பிறர் காமம் போக்கல் தாம்
தவமோ?

இது பாவம் என்று ஏன்
யார்க்கும் புரியவில்லை?
போரைத்தவிர வேறு வழி கிடையாதோ,
காமம் கொல்ல?
சீ
காமம் வெல்ல?

அரக்கரை அழிக்கும்
இராவணக்காமம்
குரக்கினம் அழியுமோ?
முன்னர் வாலியின் காமம்
பின்னர் ஆளுவோன் காமம்.



ஆட்சிக்கு வரும்போது
காமத்தை முதலில்
அப்புறப்படுத்த வேண்டும்
என்று தானே
சுக்கிரீவனிடம் மொழிந்தோம்...

அறிவுரை மட்டுமே
ஆயுளைக் காக்குமோ?

புரிபடவில்லை.
போர் தொடங்கியாயிற்று.

8

கடல்கோள் விழுங்கித்
துப்பியது போலக்
கரையெங்கும் சடலங்கள்...
நடுநிசி முடிந்தும்
அடங்கவில்லை

வகுத்த வியூகங்கள்
போர் முறைப்படி
வெற்றிதான் எனினும்
தன் குறிக்கோள்
எப்படி
தவறிப் போயிற்று?



இலக்குத் தவறாமல்
அம்பெய்தி என்ன பயன்?

வாழ்வின் இலக்கெது?

இராவணனைக் கொல்லலா?
சீதையை மீட்டலா?

நாளையோடு
முடிந்துவிடும் போர்.
தென்னகங் காக்க
மன்னவன் தயார்.

தான்
தம்பியொடும்
தாயகம் திரும்பல் நிச்சயம்.
சென்று
காண்பது யாரை?
எப்படி?

வழக்கம்போல,
அன்னை கைகேயியை-
அப்படிச்
சொல்லமுடியாதபடிக்குத்தான்
தந்தை



வரத்தையே சாபமாய்
வழங்கி விட்டாரே!

'அண்ணா' எனவரும்
இளவல் பரதனை
எப்படித்
'தம்பி' என்று
தழுவ இயலும்?

அண்ணன்களுக்காகத்
தம்பிகள்
துயர்படுவதும்
அழிபடுவதும்
எத்துணை கொடுமை?

ஒரு பிடிவாதம்போல
அழிபட்டுப் போன
கும்பன்-
இராவணனின்
இலக்குவன் அல்லனோ?

அருமைப் புதல்வனை -
உரிமைச் சுற்றத்தை -
உயிரினும் பெரிய
மானத்தை-

இத்துணை எளிதாய்க்
காமம் கொல்லுமோ?

இராம எதிரி
இராவணனா?
காமனா?

'யாரொடும் பகை கொள்ளலன்'
என்பது அறிவுரையாக
முடிந்து போவதோ?

இன்னமும்
அறம்
இலக்கிய மேற்கோளோ?

வாழ்வியல் ஆக
வழியே இல்லையா?

வில்லினும் விரைந்து
துளைத்தெடுக்கும்
வினா வளைந்து
வரையத் தொடங்கியது-
இது வரையிலான
இராம சரித்திரத்தை!



9

பயணம்
வாழ்க்கைப் பயணம்...

வேள்வி காக்கக்
கானகம் நோக்கி
முதலில் தொடங்கிய
கன்னி யாத்திரை-

முனிவன் முன்னேக
தம்பி பின் தொடர
விரைந்த பயணம்...

கதையாய்க் கேட்ட தாடகை
ஒரு பெண் உருக்கொண்டு
எதிரில் வந்தபோது
ஒன்றும்
செய்யத் தோன்றவில்லை.

எப்படி ஒரு பெண்ணைக்
கொல்வது?

"அரக்கி இவளை அழி!''
என்று
பெண்மையின் இலக்கணம்



முனி உரைத்த வாசகம்
முற்றுமாய் உணர
முடியாத வயது அது.

“நின் உரை வேதம்'' என்று
தன் அறம் முடித்த அன்று
அரக்கி வடித்த கண்ணீரும்
செந்நீரும்
இரக்கமின்றி
இன்று வாட்டுவதோ?

காலின் துகள் பட்ட
கல் ஒன்று
பெண்ணாய் எழுந்து
வணங்கி நின்றபோது
அகலிகை என்று
முனிவன் உரைத்த கதை
முழுதும் உணர முடியவில்லை.

‘எப்படிக் கல்லாய்
உறைந்து கோதமன்
இருந்தான்?’ என்பது தான்
வியப்பு அப்போது.



'ஆவியை,
சனகன் பெற்ற அன்னத்தை
அமுதின் வந்த
தேவியைப் பிரிந்ததாலே
திகைத்தது போலும்
புத்தியும்...!'

பாவி,
'எண்ணிலா இடர்தருவாய்!' என்று
எச்சரித்ததனை
ஏற்றுச் சானகி
அரண்மனையிலேயே
இருந்திருந்தால்..!

பொங்கிவருவது
கோபமா?
ஆற்றாமையா?
புலப்படவில்லை.

எதிரில் ஓர் உருவம்
குனிந்து வணங்கி...
ஓ இலக்குவன்...!

உறங்கும் நேரத்தை உணர்த்தி
உறக்கம் இல்லாமல்
காவல் புரிந்து...



பெண்ணிரக்கம் கொண்டு
பெருந்துயரம் உற்றுத்
தன்னிரக்கம் கொள்ளும் இத்
தருணத்தில் ஏது உறக்கம்?

சீதையே ஓர் கணம்
அரக்கியாய்ப் படிமம் கொள்வதைத்
தவிர்க்க முடியவில்லை
இராமனால்.

10

“ஊண்திறம் உவந்தனை
ஒழுக்கம் பாழ்பட
மாண்டிலை.
முறை திறம்பு அரக்கன் மாநகர்
ஆண்டு உறைந்து
அடங்கினை ,
அச்சம் தீர்ந்து இவண்
மீண்டது என் நினைவு?
எனை விரும்பும் என்பதோ?”

என்ன இது
தனக்கு என்ன ஆயிற்று?



இத்தனை நாள் பொறுத்திருந்து
இவளைக் கண்டதும்
பேசவேண்டிய
பேச்சா இது-

தாதை சடாயு
மொழிந்த சொல் -
“வம்புஇழை கொங்கை வஞ்சி
வனத்திடைத் தமியள் ஆக
கொம்பு இழை மானின்பின் போய்,
குலப்பழி கூட்டிக் கொண்டீர்”

மானைத் தேடிப் போன
தன்னைத் தேடித்
தம்பி வர
ஐயோ,
கையையும் நழுவி
உடுக்கை இழக்கும் அவமானம்..!

“... ஆயும் காலை,
உம்பிழை என்பது அல்லால்,
உலகம் செய் பிழையும் உண்டோ?

உம்பிழை என்பது அல்லால்,
உலகம் செய் பிழையும் உண்டோ?



உம்பிழை என்பது அல்லால்...

உம்பிழை என்பது...

உம்பிழை...

உம்..."

ஆம்!

"உன்னை மீட்பான் பொருட்டு
உவரி தூர்த்து,
ஒளிர் மின்னை மீட்டுறு படை அரக்கர்
வேர்அற,
பின்னை மீட்டு,
உறு பகை கடந்திலேன்..."

அரக்கர்கள்
வானரர்கள்
முதலானோர் கூடிய களத்தில்
நின்று தன்தோல்வியை
உரத்து முழங்கினால்தான்
ஒழியும் இந்த உறுத்தல்–

"பிழை
என்னை மீட்பான் பொருட்டு,
இலங்கை எய்தினேன்"



'யாரோடும் பகை கொள்ளலன்'
என்ற
பால பாடம்
தவறிய பதற்றம்...

அரக்கர்களோடு
அப்பாவிக்
குரக்கினத்தின்
குருதியோடு இன்னுயிர் பருகி
ஒளி பெருகிய அணிகளோடு
முன்னிற்பவளோ சீதை?

"மருந்தினும் இனிய மன்னுயிர் வான் தசை
அருந்தினையே.
நறவு அமைய உண்டியே.
இருந்தனையே...
இனி எமக்கும் ஏற்பன
விருந்து உளவோ?"

இத்தனை காலம் அடக்கிய
துயரம்
ஆற்றாமை
விரக்தி
அவமானம்
வெகுளி

.................

.................

எல்லாம் போட்டு

இலக்குவன் அமைத்த

எரியிடை இறங்கிய சீதையைப்

பார்த்தும்

ஏதும் பேசாமல்

எள்ளளவும் பதறாமல்

மரத்துப்போய்-

தான் மனிதனா?

விலங்கா?

அரக்கனா?

தேவனா?

யார்?

யார் நான்?

எனும் தேடல் வேள்வியில்

மூழ்கியபோதில்

தன்னொடு சேர்ந்து

சீதையும்..!



அகநெருப்பில்
இராமனும்
புற நெருப்பில்
சீதையும்...

கதை நெருப்பில்
குளிர் காய்வோர்க்கு
எப்படிப் புரியும்
அக்கினிப் பிரவேசம்?

- 11.12.2005







"Rama and Sita are the ideals of the Indian nation. All children, especially girls, worship Sita. The height, of a woman's ambition is to be like Sita, the pure, the devoted, the all suffering..."

-Swami Vivekananta.



## அமுதும் நஞ்சும்

"வாழ்க்கையோர் பாற்கடல்
நம்பிக்கை மேரு
முயற்சி வாசுகி
நன்றுந் தீதுங்
கூடிக் கடைய
நஞ்சும் அமுதும்
ஆங்கே பிறக்கும்!-

அமுதொடு பிறந்தாள் அன்னை
இலக்குமி! அவளைப் போலே,
அமுதொடு பிறந்த தாம்நம்
அருந்தமிழ் மொழியும்! அந்த
அமுதினை ஒத்த தாம்தம்
அருமந்தக் குழந்தை பேச்சு!
அமுதினைப் போன்ற தன்றே
அவரவர் உழைப்பின் ஆக்கம்!



அமுதொடு பிறந்த தே,தீ
நஞ்சுமாம்! நஞ்சை அஞ்சி
அமுதினைத் தவிர்த்தல் யாரும்
ஆற்றிட மாட்டார்! நாட்டில்
அமுதினை நஞ்சு என்பார்!
நஞ்சினை அமுதம் என்பார்!
அமுதமே நஞ்சாய் மாறும்
அதிசயம் அறிய மாட்டார்!

"அமுதமா சீதை? இல்லை
அழித்திடும் நஞ்சா?'' என்று
புனிதமாக் கம்பன் தந்த
புகலருங் காதை பற்றிக்
கவிதைகள் துணையாக் கொண்டு
கழறுவர் அறிஞர்'' என்று
அவையுடைத் தலைவர் சொன்னார்
அறிஞரும் பேசல் உற்றார்!

"அமுதமே சீதை! இராமன்
ஆதலால் வாழ்ந்தான்; தீய
அரக்கனைப் போரில் மாய்க்கும்
ஆற்றலை அதனால் பெற்றான்;
அமுதமே சீதை! போற்றி
அனுமனும் பேற்றைப் பெற்றான்;
அமுதமே சீதை! கம்பன்
ஆதலால் தமிழைப் பெற்றான்;

"ஆவியைச் சனகன் பெற்ற
அன்னத்தை அமுதின் வந்த
தேவியை" என்று வாலி,
திருமகன் இராமன் முன்னால்
ஆவிபோம் காலந் தன்னில்
அறைந்ததைக் கம்பன் தந்தான்
தேவையா இன்னும் சாட்சி?
தீர்ப்பினை உரைப்பீர் நன்றே!"

என்றவர் முடிக்கும் முன்னே
எழுந்தவர் ஆவேசத்தால்
"கொன்றுநான் தின்பேன்! உன்றன்
குருதிபோல் உயிர்கு டிப்பேன்!"
என்றவர் முடிக்கும் முன்னே
எதிர்க்கட்சித் தலைவர் பாய்ந்து
மன்றினில் அலறல் உற்றார்
"மனிதரா இவரே நஞ்சு!"

"உண்மைதான்! நானும் இங்கே
ஒப்புவேன்! இதனைச் சொன்னான்
மண்ணினில் மனிதன் அல்லன்;
மாபெரும் அரக்கன்!" என்றார்.
"இன்னும் நான் முடிக்கவில்லை
எதற்கவர் எழுந்து வந்தார்
அமுதினை உண்டார் ஏன்தான்
அரவினைக் கண்டார் போலே,

அலறினார்; அறியேன் ஐயா!
ஆதலால் அவர்சொல் பொய்யாம்!
காதலால், சீதை தன்னைக்
கவர்ந்தவோர் அரக்கன் நெஞ்சில்
சீதையார் அமுதம் இல்லை
சீக்கிரம் கொல்லும் நச்சாம்!
ஆதலால் சொல்லு கின்றேன்
அன்னையார் சீதை நஞ்சாம்!

'உண்டிடல் வேண்டாம் சீதை
உயிருண்ணும் நஞ்சு' என்றே
தன்னுடன் பிறந்தார் எல்லாம்
தந்ததோர் விளக்கம் போக்கித்
தென்னகர் இலங்கை முற்றுந்
தீயினுக் களித்துப் பின்னும்
மன்னனாய் இருந்தான் அந்த
மாபெரும் அரக்கன், மாய!

தம்பியை ஏகச் செய்தான்!
தம்படை மாளச் செய்தான்!
கும்பனை வீழச் செய்தான்!
குழந்தையைச் சாகச் செய்தான்!
நம்பினார் உயிரை எல்லாம்
நச்சினுக் கிரையாய்த் தந்தான்!
தம்புகழ் கொடுத்து மாளாப்
பழியினைக் கொண்டான் பித்தன்!



போதுமா விளக்கம்!'' என்றார்
"புதுமைகள் சொல்லல் வேண்டின்
வாருமே ஐயா, சீதை
அமுதமே என்பார் வந்து
மோதுமே! மோதி வெற்றி
முடியுமே பார்ப்போம்!'' என்றார்;
வாதினைக் கேட்பார் தந்த
கரவொலி பெற்றுக் கொண்டார்!

"அமுதமா நஞ்சா என்று
அருந்தமிழ் அறிஞர் கூடித்
திறமுடன் வாதம் செய்தார்
திருமகள் சீதை (பே)ப(ா)ற்றி!
ஆக்கமும் கேடும் போலே
அமுதமும் நஞ்சும் செய்வார்
பாக்கியம் ஆகும்! யாரும்
போக்கிடப் போகா! காண்பீர்!

வாக்கினால் தத்தம் கட்சி
வலுப்பெறப் பேசிச் சென்றார்
நோக்கினால் இரண்டும் ஒன்றே
என்பதோர் தீர்ப்பும் ஆமா?
பார்க்கலாம் கம்பன் செய்த
பாக்களால்! அன்னை சீதை
யார்க்கெலாம் அமுதம் ஆனாள்?
யார்க்கெலாம் நஞ்சாய்ப் போனாள்?

நீரிடைத் தோன்றி நின்ற
திருமகள் தன்னை இந்த
நிலமகள் தவங்கள் செய்து
சீதையாய்ப் பெற்றாள்! பெற்றுப்
பாரிடை விஞ்சி நிற்கும்
பகைமையை, இரக்கம் என்னும்
சீரினை மாய்க்கும் தீமை
அரக்கரை மாய்க்க வேண்டிப்

போரினை நடத்திச் செல்லப்
புதுமைகள் செய்ய லுற்றாள்!
பெண்மையை அமுதம் என்பார்!
பேச்சினை அமுதம் என்பார்!
கண்மணி அவளே என்பார்!
கவிதையே அவள்தான் என்பார்!
தின்கிற பொருளாய்க் காண்பார்!
தினம்நுகர் பொருளாய்ப் பார்ப்பார்!

பெண்மையைத் தன்னை ஒத்த
பிறவியாய் அறிய மாட்டார்-
தன்மையைப் போக்கல் வேண்டித்
தவம் செய்த தவமாம் தையல்
அன்னையைச் சீதை தன்னை
அற்புதம் ஆகக் கம்பன்
மின்னலைப் பறித்து வான
மீன்களை இணைத்துக் கோத்து



தண்பனி தன்னைச் சேர்த்துத்
தமிழையே மொழியாக் கூட்டிப்
பெண்மையாய் வார்த்தான் கம்பன்
பெருமாட்டி தன்னை நஞ்சாய்
உண்பவர் அரக்கர் அன்னை
உயிர்காக்கும் அமுதம் என்பார்
தன்னையும் கடந்து அன்னை
தகுதியை நோக்கிப் பார்த்தால்,

உண்மைஒன் றறியக் கிட்டும்
உணருவார் கூர்ந்து நோக்கின்!
பெண்மையே உலகை ஆக்கும்;
பெண்மையே உலகைக் காக்கும்;
பெண்மையே பெண்மை காக்கும்;
பெண்மையே ஆண்மை சேர்க்கும்;
பெண்மையே இல்லை யாகப்
பெரும்பிழை புரிவோர் தம்மைப்

பெண்மையே அழித்துக் காக்கும்
பெண்மைபேர் மனிதம் என்னும்
உண்மையை உரைக்க வேண்டி,
வேறுள குழுவை எல்லாம்
மண்ணிதில் வெல்லு கின்ற
மானுடம் தன்னைக் கம்பன்
பண்ணினில் பாடித் தந்தான்;
பாவுளம் கருதிப் பார்த்தால்!

'நஞ்சிலள் அமுதும் அல்லள்
நாயகி பெண்ணே ஆவாள்!'
வஞ்சனை செய்ய வேண்டாம்
வாழ்வினில் யார்க்கும் யாவும்
எஞ்சிடா நிலையில் எய்தும்;
இன்பமே துன்பம் இல்லை!
வெஞ்சினம் கொள்ள வேண்டா
வெற்றிநம் மனிதத் திற்கே!

அன்பினைச் செய்வோம்; நாளும்
அன்பினை ஈவோம்; கொள்வோம்;
அன்பதே அமுதாம்; அந்த
அமுதினைக் கொல்லும் நஞ்சு
என்பதே இல்லை என்னும்
இலக்கு தான் சீதை!" என்று
அன்புறத் தீர்ப்புச் சொன்னார்
அவை மகிழ்ந்து ஏற்ற தம்மா!







"வைதேகி!... உனது அணிகலன்கள் எல்லாம் இந்த மண்ணில் விழுந்து கிடக்கின்றன.... ரத்தினங்களும் முத்தும் வேண்டாமென்று உதறிப் பெண்மையின் அணிகலன்களை மட்டும் தரித்துக் கொண்டவளே, நீ எங்கிருக்கிறாய்?

துயரமும் அச்சமும் கண்ணீரும் அவமானமும் கண்களில் தேங்க வானத்தை நோக்கி தீனமாய், அவலமாய்ப் பெருமூச்செறியும் கோடானு கோடி பாரதப் பெண்களில் நீ யாராக எந்தக் காராக்கிருகத்தில், எவர் காவலில் எங்கே, கட்டுண்டு கிடக்கிறாயோ?

ஏ! பூமியின் புதல்வியே! உனக்குத் தாய் இல்லை; தந்தை இல்லை; உடன்பிறப்பு இல்லை; உற்றார் உறவினர் இல்லை; உனக்கு ஜாதி இல்லை; மதம் இல்லை; குலம் இல்லை; கோத்திரம் இல்லை; நாடு இல்லை; மொழி இல்லை... எல்லையற்ற துன்பமே! நீயே சீதை! ஏ, இறுதி காணாச் சோகமே! நீயே சீதை!

ஓ! தேவி!... நீ அபலையாய், அனாதையாய், அடிமையாய், வாழ்க்கை முழுதும் கைதியாய், உழைத்தும் தேய்ந்தும் அழிகிற சிறுமையுற்ற ஜீவனாய், எத்திசையில், எவ்வூரில், எவ்விடத்து உழல்கின்றாயோ?

-ஜெயகாந்தன்

(சுந்தரகாண்டம் நாவலிலிருந்து)



## சிதைந்த சித்திரங்கள்

திரைப்பட வாய்ப்பு மறுக்கப்பட்டு
ஊடக வாசல்கள் மூடப்பட்டு
அலைகள் உரசும் கரையின்நடுவே
பயணம் போனான்
கம்பன்
பசியோடு!

சுவடுகளில் உதிர்ந்த
கவிதைச் சொற்களைக்
கையகப்படுத்திய கடல்
பையப் பையப்
பாற்கடல் ஆயிற்று..!



வறண்ட காவிரி
மனதைப் பிறாண்ட
தொண்டை அடைத்தது
கவிச்சக்கரவர்த்திக்கு.

கொக்கக்கோலா விற்கும்
சிறுவனுக்குக் கொடுக்கக்
காசில்லை.

சம்பந்தமில்லாமல்,
அரபுநாட்டிற்குப் பிழைக்கப்போன
சடையப்பன் ஞாபகம்
தொற்றிக் கொண்டது.

குலோத்துங்கன் டெல்லிக்குப்போய்
நான்கு நாளாச்சு
அமெரிக்க அதிபர்க்குக்
கொடை கொடுக்கப் போனவன்...

மிச்சமிருக்கும் காவியச் சித்திரங்கள்
கோடை வெயிலில்
வியர்வைத் துளிகளாய்
உதிரத் தொடங்கின..!

1

காலம் மாறிப் போச்சய்யா
காலம் மாறிப் போச்சு!

கலப்பையெல்லாம்
மியூசியம் போயாச்சு!
கழனி காடெல்லாம்
அபார்ட்மெண்ட் ஆயாச்சு!

நவீன சீதையோ,
குப்பைத்தொட்டியில்!

எப்போ வருவார்
சனக மாமன்னர்?

2

மண்ணில் பெண்டிரைப்
பெற்றுப் போட்டுக்
கண்களை மூடும்
அன்னையரிடத்தினில்
தம்மை நிறுத்திய



தந்தையர் வளர்ப்பினில்
உள்ளவர் எல்லாம்

சீதையர் - கூடவே
வில்லாய்க் கிடக்கும்
வரதட்சணை!

3

இந்தப் பிறவி -
மிதிலாபுரிக் கொடிக்கு
'கல்யாணமாலை' இதழ்...

'ஒல்லையில் வா'வெனப்
பன்முறை அழைத்தும்
பலனில்லை -

எல்லை நெருங்கியும்
உள்நுழைந்து விடாமல்
கூட்டிப் போகிற

தரகரில் எவரோ
விசுவாமித்திரர்?



## 4

இப்பதான் தரகர்
வந்துட்டுப் போனார்..

அறியாத்தந்திக்கு உரியவர் போலவும்
அலோ சொல்லிச் செத்த
தொலைபேசிக்குழலுக்குச்
செவிசாய்த்தார் போலவும்
"என்ன? என்ன?"

அடுக்களையின் கதவுக்குப் பின்னால்
மகள்...
மனைச் சிறைச் சீதை!

## 5

சன்னலின் வழியே,
அண்ணலும் நோக்கினான்
அவளும் நோக்கினாள்!

இருவரும் மாறிப் புக்கு
இதயம் எய்தபின்
எடுத்து வளைக்கத் தேவையே இன்றி
இற்று வீழ்ந்தது



சிவதனுசு
ஓசையின்றி..!

6

சிறகுகள் கொடுத்தது சடாயு
பிரிந்தவர் கூடினார்
பேசத் தொடங்கியது
உலகம்..!

7

பிரிவினுக்கு அஞ்சி
உடன்போனவளைச் சிறையெடுத்த
அப்பாவின் மாரீசக் கதறல்...

சுட்டும் திசையில்
பர்ணகசாலையோடு
பெயர்த்துச்செல்ல
மாப்பிள்ளைக் கோலத்தில்
இராவணன்-

படைதிரட்டி வருவதாய்ப் போன
இராமனைக் காணோம்



8

இறுகப் போர்த்தி
இலக்குவன் தூங்குகிறான்

சுட்டுவிரல் நீட்டிச்
சொல்கிறான் இராமன்–
"தங்கமான் வேண்டும்!"

சீதை -
வேலைக்குப் போகிறாள்!

'மாருதி' வந்து
தூக்கிப் போகிறது!

சம்பளம் கொடுப்பது
இராவணக் கம்பெனி!

மரத்துப் போயிற்று
நெருப்புக் குளியல்!







"அக்கினிக் குஞ்சொன்று கண்டேன் - அதை
ஆங்கொரு காட்டிலோர் பொந்திடை வைத்தேன்
வெந்து தணிந்தது காடு - தழல்
வீரத்தில் குஞ்சென்றும் மூப்பென்றும் உண்டோ?
தத்தரிகிட தத்தரிகிட தித்தோம்!"

- மகாகவி பாரதியார்



# கவித் தீ

அறம் வெல்லும் என்ற
பொருள் உணர்த்தக் கம்பன் சொல்
பாத்திரத்தைச் சுட்ட கதை
பழைய கதை-புதிய விதை

பாத்திரத்தைச் சுட்ட கதை
படிப்பவர்தம் நெஞ்சுகளில்
வேதனையைக் கொப்புளிக்க
விட்ட கதை - தொட்ட கதை.

கம்பன் விடுகதை
பாவமெல்லாம் முற்றாக
அட்ட கதை எப்போதும்
அணையாத சுடுகதை- இராமகதை

இராவணப் பாவம்
கூனியின் வடிவில்
கைகேயியைச் சுட
தசரதன் எரிந்தான்.



கானில் நுழைந்த
அறத்தீயை-
இராமமூர்த்தியைக்
கங்கையில் நனையாமல்
குகன் மறு கரை சேர்த்தான்.

ஆங்கே-
ஏக்கவெறிச் சூர்ப்பணகை
மூக்கறுத்து முலையறுத்துப்
போக்கிவிட்ட இலக்குவன்தான்
நாக்கறுக்க மறந்ததனால்
நடந்த கதை- வளர்ந்த கதை

அரக்கன் நெஞ்சத்து
அகல்விளக்கில் காமத்தீ
இவள் ஏற்றிவிட்டதனால்
எரிந்த கதை- இராமகதை.

விரகத்தீ இவளை
விரட்டிவிட ஓடிப்போய்
இலங்கைத் தீவினிலே
ஏற்றி வந்த காமத்தீ...

காமத்தீ பற்றக்
கற்புத் தீ எடுத்து



வனத்தில் கொண்டுவந்து
வைக்க
வளர்ந்த தீ- கவிதைத் தீ.

காமத்தீ வரம்பிகந்த
காரணத்தால் நெறிகடந்து
வாலியையும் எரித்து
வளர்ந்த தீ...

பத்துத் தலைஎன்ன
அண்டமுழுவதையும்
நாக்கில் சுடும் ஆற்றல்
தேக்கி வைத்திருந்த
தேவியின் தீ கற்புத் தீ...

நாற்புறஞ் சூழ் தண்ணீரில்
நடுத்தீவு பற்றி வர
அனுமன் வாலின் தீ
ஆன தீ - அத்தீ.

இராவணச் சதியால்
பிரிந்து எரிந்த
இராமன் சீதையெனும்
அறத்தீ இரண்டினையும்
அரவணைத்த தீ...



தீயால் தீயணைக்க
முடியாது எனக்கருதி
அன்(ம்)பால் அரக்கனது
காமத்தீ அவிக்கும்
காரியத்தில் தோல்வியுற்ற
இராமத்தீ-
அரக்கர்களின் குலம்
எரித்த
அறத்தீ-

அதனுடன் இணைந்த
வீடணன்
சுடரும்
அறிவுத் தீ...

தீயையே எரித்த
தீயையே சீதையாய்
ஆக்கிய
கம்பனுள்
அடர்ந்த தீ
கவித்தீ

பாக்கியில்லாமல் ஏன்
படிப்போரைச் சுடவில்லை?



சுட்டிருந்தால்
சாதீத்தீ சமயத்தீ
சகலவிதமான துயர்
போதிக்கும் பேதத்தீ
ஏதேனும் மிஞ்சிடுமா?

தேங்கிக் கிடக்கும்
தீ ஒரு
தீப்பெட்டியைப்போல...

எச்சரிக்கை

அறத்தீ பகைவர்களை அழிக்கும்தீ
அயோத்தீ இராமன்வழி போதும் இனி
எப்போதும்
நந்தியம்பதியின் பரதனது
வேள்வியினில்
பற்றிய அகிம்சைத் தீ
பாரதத் தீ ஆகட்டும்!

-சென்னைக் கம்பன் கழக 23 ஆம் ஆண்டுவிழாக் கவியரங்கில் கவிஞர் மு.மேத்தா தலைமையில் வாசித்த கவிதையிலிருந்து. 09. 08. 1997.





# கவிஞரின் நூல்கள்

**கவிதை நூல்கள்**

- கனவுப்பிரதேசங்களில்
- குடைமறந்தநாளின் மழை
- (பாரதஸ்டேட் வங்கியின் முதற்பரிசு பெற்ற நூல்)
- வனந்தேடி அலையும் சிறுமி
- உயிர்மெய்
- சீதாயணம்

**தொகுப்பு நூல்கள்**

- மாணவர்களுக்குப் பாரதியார் கவிதைகள்
- வாழ்வியல் நோக்கில் சமயமும் சமுதாயமும்

**ஆய்வு நூல்கள்**

- ஆதலினால் அன்பு செய்வீர்
- சுற்றுச் சூழல் கல்வியும் நமது கடமைகளும்

**கவிதை நாடகம்**

- என்றும் இருப்பேன்
- (பாரதியார் வாழ்வியல்)

**சிறுகதை**

- பாரிவேட்டை

**சிறுவர் இலக்கியம்**

- பூந்தடம் (குழந்தைப்பாடல்கள்)
- இன்றுபுதிதாய்ப் பிறந்தோம் (சிறுவர் கதைகள்)





நடையில் நின்றுயர் நாயகனைப் பாட வேண்டிய தேவை கம்பருக்கு அன்றிருந்தது; பாஞ்சாலி சபதம் பாட வேண்டிய தேவை பாரத விடுதலைக்குத் தம்கவி யாத்த பாரதியார்க்கு நேர்ந்தது; புற விடுதலை பெற்று இன்னும் அகவிடுதலை பெறமுடியாமல், மானுடம் பல்வேறு அரக்கத்தனங்களுக்குள் சிக்கிச் சிறைப்பட்டுக் கொண்டிருக்கின்ற இந்த வேளையில், ஆண் விடுதலையும் பெண்விடுதலையை அடியொற்றி நிற்கும் இக்காலத்தில், இராவணன் உள்ளிட்ட யாவருக்குமான விடுதலையைப் பெண்மையே அளித்தாக வேண்டும் என்கின்ற சிந்தனையில் சீதாயணம் பாடச் சேதுபதிக்கு வாய்த்திருக்கின்றது. கவியாற்றலில் மிகுந்த திரமிக்கவர்களின் கைகளில் கிடைத்திருக்க வேண்டிய இக்கவிப்பொருள் எளியேன் கைப்பட்டு என்னவெல்லாம் ஆகியிருக்கின்றது என்பதனைத் தான் இதில் காணப் போகின்றீர்கள்..!


**கபிலன் பதிப்பகம்**

12, 7வது குறுக்குத் தெரு

பாரதிநகர், புதுச்சேரி – 8